# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம்　　நெல்வளமே நாட்டின்வளம்

"சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 4 விளைச்சல் : 36 திருவள்ளுவர் ஆண்டு 2054 மே –2023

## உள்ளே...












# நீர்வளத் துறைக் கலைச்சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| Arid zone | – வறட்சி மண்டலம் | Metamorphic rocks | – உருமாற்றுப் பாறைகள் |
| Artesian well | – தன்னூற்றுக் கிணறு | Perched aquifer | – இடைநில நீர்த்தாங்கி |
| Capillary water | – நுண்குழல் நீர் | Percussion rig | – இடித்துளைப் பொறி |
| Colorimeter | – நிற அளவி | Piezometric level | – உள்ளார்ந்த நீர் மட்டம் |
| Deep tube well | – ஆழ்குழாய்க் கிணறு | Rotary rig | – சுழல் துளைப்பொறி |
| Divisional accountant | – கோட்டக் கணக்கர் | Saline soil | – உவர் மண் |
| Evaporimeter | – ஆவிக் கலன் | Sand stone | – மணற் பாறை |
| Field capacity | – நீர் கொள்திறன் | Schist | – தகட்டுப் பாறை |
| Gravitational water | – ஈர்ப்பு நீர் | Sedimentary rock | – படிவப் பாறை |
| Hydrogeology | – நில நீரியல் | Soil conservation | – மண் வளக் காப்பு |
| Hydrologic cycle | – நீரியற் சுழற்சி | Soil survey | – மண் வகை அளவை |
| Hydrosphere | – நீர் மண்டலம் | Swamp | – சதுப்பு நிலம் |
| Intrusion rock | – உள்நுழைவுப் பாறை | | |

சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.


# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

திருவள்ளுவர் ஆண்டு 2054 மேழம் (சித்திரை)

மே – 2023





செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# கொரிய மொழியின் தாய் தமிழ்மொழி!

தமிழ்மொழி உலக மொழிகளுக்கெல்லாம் தாய்மொழி. தமிழ் உலக நாகரிக, பண்பாட்டின் தொட்டில் என்றே கூறலாம். தமிழ்மொழி உலகமொழி, இனம் கடந்த மொழி. ஒரு மொழி பிற மொழியுடன் ஒப்பிடும்போது குறைந்தபட்சமாக மூன்று விழுக்காடு சொற்களுக்கு மேல் ஒற்றுமை வர முடியாது. ஆனால், தமிழ் மொழியில் இருந்து உலகிலுள்ள அனைத்து மொழிகளுக்கும் ஒரு ஒழுங்கு அமைப்புடன் கூடிய சொல், தொனி, தொடர்பு 20%-க்கும் அதிகமாக உள்ளது. ஆங்கிலத்தில் 20% நேரடி தமிழ்மொழி உள்ளது. இலத்தீன், கிரேக்கம் ஆகியவற்றில் 50% நேரடி தமிழ்மொழி உள்ளது என்று புள்ளி விவரங்கள் கூறுகின்றன. தமிழ் ஓர் இயங்கு மொழி. திராவிட மொழிகள் அனைத்துக்கும் தாய்த்தமிழே மூலமாக விளங்குகிறது. ஆப்பிரிக்க மொழிகள் அனைத்துக்கும் அடி ஆணிவேர் தாய் மொழியாகிய தமிழே. தமிழின் பழைமை என்பது உலகின் எந்த மொழியும் எட்டிவிட இயலாத காலகட்டத்தில் உள்ளது.

தமிழ்ச்சொற்களுக்குத் தமிழிலேயே வேரும் பொருளும் உண்டு. "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்றார் தொல்காப்பியர்". "கட்டு மரம்" என்ற தமிழ்ச்சொல் ஆங்கில மொழியிலும் Catamaranதான். மொழியின் ஆளுமைத்திறம் என்பது இதுதான். இயற்கை மொழிக் காவலர் மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் தமிழ்தான் ஞால முதன்மொழி என்றார். 20 மொழிகளில் முழுமையான ஆளுமை அவருக்கு இருந்தது. இலத்தீன், கிரேக்கம், ஈப்ரு (Latin, Grec, Hebru) தமிழில் இருந்து வந்த முறையை எழுத்து மூலம் நிறுவினார்.

பழங்காலத்தில் இந்தியாவுக்கும் கொரியாவுக்கும் இடையிலான பண்பாட்டுப் பரிமாற்றம் என்பது சிறப்பாக இருந்தது. தென்கொரியாவில் வீடுகளில் தமிழ்ச் சொற்கள் ஒலிக்கின்றன. அம்மா, அப்பா கொரிய மொழியிலும் இது தாய் தந்தையைக் குறிக்கச் சொல்லப்படுகிறது. கொரியக் குழந்தைகள் முதலில் கற்றுக்கொள்ளும் அடிப்படைச் சொற்களில் இவை முகாமையானவை..

தமிழில் இயல்பாக நாம் பயன்படுத்தும் அச்சச்சோ, அப்பாடா எனும் சொற்களை அப்படியே கொரிய மொழியில் ஒலிக்கின்றனர். உயரம் என்பதை உரம் என்றும், நீ திரும்ப வா என்பதை நீ இங்கே பா என்றும் கூறுகின்றனர். புல்லை வெட்டு என்பதை புல்வேடா என்று சொல்கின்றனர். பெரிய அளவில் இரு மொழிகளுக்கும் இடையில் வேறுபாடு இல்லை.

புதியதை - புது என்கின்றனர் கொரியர்கள். கொரிய நாட்டு மக்கள் பேசும் மொழி அங்குல் (ஹங்குல்) எனப்படும். ஆரம்ப காலத்தில் சீனமொழி பேசி வந்த கொரிய மக்கள், 16-ஆம் நூற்றாண்டு முதல் அங்குல் (ஹங்குல்) எழுத்து வடிவத்தை ஏற்றுப் பின்பற்றத் தொடங்கினர். அதன் பின் அவர்களின் பொருளாதார முன்னேற்றம் வேகமெடுத்தது. கல்வியறிவு விழுக்காடு உயர்ந்தது. ஒவ்வொரு நாடும் மொழியை முன்னிறுத்தியே முன்னேறுகிறது. தமிழ் - கொரியன் மொழிகளை ஒப்பிட்டால் 1500-க்கும் மேற்பட்ட ஒலிப்புகள் பொதுவாக உள்ளன என்கின்றனர் மொழியறிஞர்கள்.

தமிழ் நடைமுறையைப் போலவே கொரிய நடைமுறையிலும் முறையான (Formal), முறைசாரா (Informal) என இரு வகையாக உள்ளது.

| தமிழ் மொழி | - | கொரிய மொழி |
|---|---|---|
| யாழினி | - | Yalini |
| அம்மா | - | Omma |
| அப்பா | - | Appa |
| நீ | - | Ni |
| நான் | - | Nan |
| வா | - | Wa |
| புல் | - | Pul |

மேலும், தமிழ்மொழியில் உள்ள சொற்களின் சாயல் கொரிய மொழியில் ஏராளம் உள்ளன என்று கொரிய மொழியறிஞர் ஜீங்நாம்கிம் என்பவர் கூறுகிறார். தமிழில் வயிறு என்பதை கொரிய மொழியில் "பை" என்பர். தமிழிலும் வழக்கில் வயிற்றுப் பை என்றும் பயன்படுத்துவதை இவ்வாய்வறிஞர் சுட்டுகிறார்.

உயரத்தைக் கொரிய மொழியில் உரம் என்றே கூறுகின்றனர்.

| | | |
|---|---|---|
| கண் | – | நுகண் |
| மூக்கு | – | கோ |
| பல் | – | இப்பல் |
| கொஞ்சம் | – | கொங்கும் |

என்றும் சான்று காட்டலாம். கொரியாவில் குழந்தைகளைக் கொஞ்சுவதற்குப் பயன்படுத்தும் சொற்களும் தமிழ்மொழிச் சாயலில்தான் இருக்கின்றன.

தூரிதூரி, சாஞ்சுக்கோ, கொஞ்சு கொஞ்சு, ஜம்ஜம், அபூபா, குக்குக்கூ, தேரிடா எனக் கொரிய மொழியில் குழந்தைகளைக் கொஞ்சுகின்றனர்.

தமிழ் மொழியைப் போல் கொரிய மொழியிலும் உயிர், மெய், உயிர் மெய் எழுத்துகள் உள்ளன. கொரிய மொழியின் அடிப்படையான உயிர் எழுத்துகள் யின்யாங் கொள்கையின்படி ஆகாயம், நிலம் மற்றும் மனிதன் என்ற மூன்று கூறுகளைக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளன. தமிழில் அடிப்படை மெய் எழுத்துகள் ஒலி எழுப்பும்போது நமது உறுப்புகளான நாக்கு, தொண்டை, வாய் மற்றும் பல் ஆகியவை ஒலி எழுப்பும் அமைப்பின்படி உள்ளது. தினத்தைத் தமிழில் நாள் என்பது போல் கொரிய மொழியில் நால் என்கின்றனர்.

தமிழின் வரி வடிவம் கொண்டே கொரிய மொழியின் வடிவம் அமைக்கப்பட்டுள்ளது. இதற்கும் சான்றுகள் உள்ளன. மொழியின் ஒற்றுமையைப் போன்றே பண்பாட்டுப் பரவலும் நாம் பார்க்க வேண்டியதே. பாண்டிய நாட்டின் இலச்சினையான மீன் இலச்சினை கொரியாவில் பயன்படுத்தப்படுகிறது. சொல்லா என்ற மாவட்டம் கொரியாவில் உள்ளது. இது சோழா என்பதன் திரிபு என்றும் கூறுவர். உணவுப் பெயரிலும்கூட தோசை, கொழுக்கட்டை எனப் பயன்படுத்துகின்றனர்.

சென்னை இன்கோசென்டரைச் சேர்ந்த நந்தினி மேனன், தமிழ் மற்றும் கொரிய மொழிகளில் 3000–க்கும் அதிகமான பொதுவான சொற்கள் இருப்பதை உறுதிப்படுத்தி உள்ளார். சான்றாக, தமிழில் முடி என்பதனைக் கொரிய மொழியில் மாலி (mao–li) என்று ஒலிப்பர். தொப்பை – தொப்பு (toh–pu) எனப்படுகிறது. இங்கே வா என்பது இங்வா (Yeogiwa) என்பர். மேலும், மொழியில் மட்டுமல்ல பண்பாட்டிலும் கூட தமிழர்களின் தொன்மை அங்கு உள்ளது. அங்கும் வீட்டு வாசலில் கோலம் போடும் பழக்கம் உண்டு என்கின்றனர்.

| தமிழ் | – | கொரியன் |
|---|---|---|
| பித்து (நிலையற்ற தன்மை) | – | மிச்சின் |
| கொஞ்சம் | – | ஜோகும் |
| படபட | – | பதம்பதம் |
| மனைவி | – | மனுரா |
| தம்பி, தங்கை, நுங்கை | – | நுனா |
| அக்காள் | – | அக்காச்சி |
| ஐயோ (வலி) | – | ஐகோ |
| அறிவாயோ | – | அரேயோ |
| கட்டிப்பிடி | – | அணை |
| மகன் | – | மேக்னி |
| கிறுக்குதல் (வரைதல்) | – | கிரிடா |
| கைப்பை | – | காபாங் |
| அப்பால் | – | ஆப் |
| சோறு | – | சூரா |
| வெட்டுக்கிளி | – | மேட்டுகி |
| வெட்டு | – | வேடா |

இப்படிப் பல்வேறு சொற்கள் ஒற்றுமை பெற்றுள்ளன. தமிழுக்கும் கொரிய மொழிக்குமான உறவு என்பது தாய் – சேய் உறவு என்றே கூறலாம். இரு நாடுகளுக்கும் இடையே வணிகத் தொடர்பில் தொடங்கிய நல்லுறவு உயிரும், உணர்வும் கலந்த மொழிப் பரவலில் முடிந்திருக்க வேண்டும். ஒரு மொழியின் சிறப்புக்கும், பரவலுக்கும் மூன்று கூறுகள் முகாமையானதாகக் கூறப்படுகின்றன. இலக்கியம் சிறப்பு, வணிகச் சார்பு, தொல்லியல் தன்மை. இவை மூன்றுமே தாய்மொழியாம் தமிழுக்குரிய தனிச்சிறப்பு. அதனால் தான் இன்றும் நின்று மிளிர்கின்ற நிலைபேறு பெற்றுள்ளது. நிற்க.

இவ்வியக்ககம் செயற்படுத்திவருகிற கலைச்சொல்லாக்கம் உள்ளிட்ட மொழிக்காப்புப் பணிகளுக்குத் துணைநிற்கும் அகராதியியலாளர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், மொழியியலாளர்கள், தமிழறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், மாணவர்கள் உள்ளிட்ட அனைவருக்கும் இவ்வியக்ககத்தின் சார்பில் நன்றி நவில்கிறேன். ஞாலமறிந்த அகராதியியல் அறிஞர் முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம் அவர்களின், "சங்க இலக்கியத்தில் கல்விசார் பண்பாடு" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், மலேசியத் தமிழ்நெறிக் கழகத் தேசியத் தலைவர் திரு.இரா. திருமாவளவன் அவர்களின், "எனும் வளியின் வேர்மூலமும் தமிழின் அஃகும் தீயதையும்" என்னும் பொருண்மையிலான கட்டுரையும், வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களின் "Lexicography" எனும் ஆங்கிலக் கட்டுரையும், தமிழ்நாடு அரசு, மேனாள் மொழிபெயர்ப்புத் துணை இயக்குநர் முனைவர் கு. பாலசுப்பிரமணியன் அவர்கள் வழங்கிய, பாவேந்தர் பாரதிதாசனாரின் "எந்நாளோ?" எனும் பாவின் ஆங்கில மொழிபெயர்ப்பும் இம்மாதச் "சொல்வயல்" மின்னிதழுக்கு அணிசேர்க்கின்றன. அப்பெருந்தகைகளுக்கு மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன். இவ்வியக்ககம் நெறிப்படுத்தும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்குகளில் பங்கேற்றுத் தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றிய பலதுறை சார்ந்த அனைத்துத் தமிழுள்ளங்களுக்கும், என் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

பயிலரங்கங்களுக்கான தொழில்நுட்ப ஒருங்கிணைப்பைச் செய்துவரும் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் இரா. பன்னிருகைவடிவேலன் அவர்களுக்கும் அகம்நிறை அன்பு நன்றியை உரித்தாக்குகிறேன். தமிழ் என்னும் ஒற்றைப்புள்ளியில் ஒருங்கிணைந்த உள்ளத்தினராய் என்றென்றும் ஒருங்கிணைந்து செயலாற்றுவோம்...

செயலால் பேசுவோம்...

## வாழ்த்துகள்



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்களின் ஆணைக்கிணங்க,
தமிழ் வளர்ச்சித்துறை அமைச்சராகப் பொறுப்பேற்றுள்ள
மாண்புமிகு அமைச்சர் திரு. மு.பெ. சாமிநாதன் அய்யா அவர்களுக்குச்
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில்
நல்வாழ்த்துகளைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

# சங்க இலக்கியத்தில் கல்விசார் பண்பாடு



**முனைவர் பேரா. ச.சச்சிதானந்தம்**
இயக்குநர் பன்னாட்டு உயர்(கல்வி) தமிழாய்வு நிறுவனம், பாரிசு

'மக்களுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளை எடுத்துக் கூறும் செய்யுட்களோ நூல்களோ படிப்போரது உள்ளத்தைக் கொள்ளை கொண்டு, அவரது வாழ்க்கையையும் வழிப்படுத்த வல்லன. இவை இலக்கியம் எனப்படும்.' ( Literature is thus fundamentally an expression of Life through the medium of language. An Introduction of the study of Literature. –Hudson) ஹட்ஸன்.

இலக்கியம் என்பது மக்களுக்கு எல்லாம் பொதுவாகப் பயன்படும் பொருளை உடையதாய் இனிய வகையில் சொல்லப்படுவதாய் இருத்தல் வேண்டும். சொற்கட்டுச் சிறந்து இனபம் பயத்தலைக் குறிக்கோளாளப் பெற்றிருத்தல் வேண்டும். அந்த வகையில் அத்தனையும் பெற்றிருப்பது தான் சங்க இலக்கியம்.

## சங்க இலக்கியம்

Sangam literature is the touchtone for all subsequent literature in Tamil and shaped the future of literacy discourse in the language. Even more important sangam literature is one of the great lit–eracy Treasures o the World.'
– George . L.Hart.

முற்காலத்தில், மதுரையில் தமிழை வளர்ப்பதற்கு என்று சங்கம் எனப்படும் அமைப்பு இருந்தது. அச்சங்கத்தில் தோன்றிய செய்யுள் இலக்கியம் சங்க இலக்கியம் எனப்படுகின்றது. தமிழ்ச்சங்கம் இருந்த காலம் சங்ககாலம் என அழைக்கப்படுகின்றது. இது கி.மு.இரண்டாம் நூற்றாண்டு முதல் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு வரை நிலவியது எனக் கருதப்படுகின்றது.

சங்க இலக்கியங்கள் அகப்பொருள், புறப்பொருள் என இருவகையாகப் பாகுபாடு செய்யப்பட்டிருக்கின்றன. இவற்றுள் ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உளதாய காதல் ஒழுக்கத்தினைக் கூறுவது அகத்திணை எனவும். வீரம், கொடை முதலான சமுதாய வாழ்க்கையைப் பற்றிய செய்திகளைக் கூறுவது புறத்திணை எனவும் வகைப்படுத்தப்பட்டன. இதனால் சங்க காலத் தமிழரின் வாழ்வு காதலையும் வீரத்தையும் மையமாகக் கொண்டிருந்ததை உய்த்துணர முடிகிறது.

சங்க இலக்கியம் சான்றோர் செய்யுள் எனவும் பெயர் கொண்டுள்ளது. இச்சான்றோர் செய்யுள்கள் தமிழிலக்கியம் எனும் மரத்திற்கு வேராக அமைகின்றன. இவை தமிழர் பண்பாட்டையும் வரலாற்றையும் அறியும் பெட்டகங்களாகவும் விளங்குகின்றன.




'பெருமை வாய்ந்த நம் சங்க இலக்கியத்தின் பிறிதோரியல்பு யாதெனின், அஃது எத்துணைத் தொன்மை வாய்ந்ததாய் இருப்பினும், எக்காலதததும், எந்நாட்டவர்க்கும் இலக்கியச் சுவை அளிக்க வல்ல

தன்மையாகும்.' என்றார் தனிநாயக அடிகளார்.

**சங்க இலக்கியத்தின் வெட்டுமுகம் :**

பொருள் : அகப்பொருளான காதலையும், புறப்பொருளான வீரத்தையும் புகழும் 2381 பாடல்கள்.

புலவர்கள்: 473 பேர். அவர்களில் 41 பேர் பெண் புலவர்கள். புலவர்களில் 102 பேரின் பெயர்கள் அறியப்படவில்லை.

**கல்வி**

உயிரினங்கள் தம் பிறப்பு முதல் இறப்பு வரை ஏதேனும் ஒரு புதிய கருத்தையோ, செயலையோ கற்றுக்கொள்கின்றன. இக்கற்றல் ஆனது உயிரினங்கள் தம் புலன்கள்வழி நடைபெறுகின்றன. கல்வி கற்றதன் விளைவாக ஒருவன் தன்னுணர்வு பெறுவதுடன் சமூக உணர்வினையும் பெற்றுத் திகழவேண்டும். அவன் 'நான்'( 'I' feeling) உணர்ச்சியுடன் 'நாம்'– ('We' feeling) எனும் உணர்ச்சியையும் பெறவேண்டும்..

சங்ககாலப் பொதுமக்கள் காதலுக்கும் வீரத்திறகும் மட்டுமல்லாமல் கல்விக்கும் முக்கியத்துவம் கொடுத்திருக்கின்றார்கள்.

'உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே'.
– புறம். 183.

**பண்பாடு**

தமிழ்ப் பண்பாடு தொடக்கத்தில் வாழும் சுற்றுச்சூழலை– நிலப்பகுதி அடிப்படையில், குறிஞ்சி முல்லை,மருதம்,நெய்தல்,பாலை எனப் பழந்தமிழர்கள் வகைப்படுத்தினர்.தமிழ் நிலத்தில் நிலவிய ஐந்திணைப் பாகுபாடுகள் பண்பாட்டு வேறுபாடுகளைக் காட்டி நிற்கின்றன.

'பண்பாடு என்பது, அறிவு, நம்பிக்கை, கலை, ஒழுக்க நெறிகள், சட்டம், வழக்கம் முதலானவையும், மனிதன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினராக இருந்து கற்கும் பிற திறமைகளும், பழக்க வழக்கங்களும் அடங்கிய முழுமைத் தொகுதி ஆகும்'. – ரைலர் (B.B.Tylor.)

கால, இடமாற்றத்திற்கு ஏற்ப ஒவ்வொரு இன மக்களும் ஒவ்வொரு விதமான பண்பாட்டினைக் கொண்டிருக்கின்றனர். அந்தந்த கால இலக்கியங்கள் அவ்வவக் காலச் சமுதாயப் பண்பாட்டு நிலைகளை வெளிப்படுத்துகின்றன.

புறநானூற்றின182ஆம் பாடல் சங்ககாலத் தமிழ்மக்களின் பணபாட்டுச் சிறப்பை உணர்த்துகின்றது.

உண்டாலம்ம இவ்வுலகம் இந்திரர்
அமிழ்த மியைவ தாயினும் இனிதெனத்
தமியருண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலு மிலர் பிறர் அஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி அனைய ராகித்
தமக்கென முயலா நோன்தாள்
பிறர்க்கென முயலுநர் உண்மையானே

**சங்க இலக்கிய படைப்புக்கள்**

சங்க இலக்கிய படைப்புக்களாக எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் விளங்குகின்றன. எட்டுத்தொகையானது தொகை என்றும், பத்துப்பாட்டானது பாட்டு என்றும் குறுக்கமாக அழைக்கப்படும். இவை இரண்டையும் கூட்டினால் பதினெட்டு வரும். இதனால் இவற்றிற்குப் பதினெண்மேல் கணக்கு என்ற பெயரும் உண்டு.

இவை இரண்டிற்குள்ளும் அகப்பொருள்,




புறப்பொருள் பற்றிய பாக்கள் பொதுவாகப் பொதிந்துள்ளன. ஆனால் தொகுக்கப்பட்ட பாடல்களின் அமைப்பு முறையால் தொகை என்றும், பாட்டு என்றும் பிரித்து வழங்கப்படுகின்றன. அடி வரையறையின் அடிப்படையிலும், திணை வகைகளின் அடிப்படையிலும் தொகுக்கப்பட்டவைக்குத் 'தொகை' என்றும், நீண்ட நெடிய அடிகளால்

பாடித் தொகுக்கப்பட்டவைக்குப் 'பாட்டு' என்றும் புலவர்கள் பெயர் வைத்தனர்.

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய இரண்டும் 2381 பாடல்களைக் கொண்டுள்ளன. மூன்றடிச் சிற்றெல்லையாக உடைய ஐங்குறு நூற்றுப்பாடல்கள் முதல் 782 அடிப் பேரெல்லை கொண்ட மதுரைக்காஞ்சி வரை பலதிறத்தனவாகிய பாடல்கள் பொதிந்துள்ளன.

சங்க இலக்கியங்கள் காட்டும் சமூக வாழ்வியல் நெறிகள், பண்டைத் தமிழரின் மேன்மை மிகுந்த சமூக நெறிப்பாடுகளைக் காட்டுவதாய், பெருமிதத்துடன் எடுத்துரைக்கப் படுகின்றன. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனும் உலகளாவிய பார்வையைப் பண்டைத் தமிழர்கள் கொண்டிருந்தனர் என்பதைச் சங்க இலக்கியம் எடுத்தியம்புகின்றது.

காதலின் மென்மையான உணர்வுகளையும், போர்களில் வெளிப்படும் வீர நிகழ்வுகளையும், மன்னர்க்கு அறிவுரை கூறும் புலவர்களின் வலிமையையும் சங்க இலக்கியங்களில் காணமுடியும். மனித உணர்வுகளையும், மனித உறவுகளையும், இயற்கைச் சூழலியலையும் சமூக இணக்கத்தையும் மற்றும் அறவிழுமியங்களையும் காலாகாலங்களைக் கடந்து நீடித்து நிலைத்திருக்கும் வண்ணம் சங்க இலக்கியங்கள் புலப்படுத்தி நிற்கின்றன.

## எட்டுத்தொகை

நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு

ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்

கற்றறிந்தார் ஏத்தும் கலியொடு அகம்புறமென்று

இத்திறத்த எட்டுத் தொகை.

எட்டுத்தொகை நூல்களில், நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய ஐந்தும் அகப்பொருளையும், பதிற்றுப்பத்து, புறநானூறு ஆகிய இரண்டும் புறப்பொருளையும் கூறுகின்றன. பரிபாடல் அகமும் புறமும் சேர்ந்த நூலாக உள்ளது.

## பத்துப் பாட்டு நூல்கள்

முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி – மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து

பத்துப்பாட்டு நூல்களில், முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை ஆகிய மூன்றும் அகப்பொருளையும், மிகுதியான ஏழு பாடல்களும் புறப்பொருளையும் கூறுகின்றன. நெடுநல்வாடை அகமா? புறமா? என்ற ஆய்வுக்குட்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

எட்டுத்தொகை நூல்கள் புலவர்களின் தன்னுணர்ச்சிப் பாடல்களால் ஆனவை. ஆனால் பத்துப்பாட்டு நூல்கள் இறையருள் வேண்டியும் இவ்வுலகப் பொருள் வேண்டியும் பாடப் பட்டவைகளாக உள்ளன.

| எட்டுத்தொகை நூல்கள் | பத்துப்பாட்டுநூல்கள் |
|---|---|
| - 1. நற்றிணை. | - 1 .திருமுருகாற்றுப்படை |
| - 2. குறுந்தொகை | - .2. பொருநராற்றுப்படை. |
| - .3. ஐங்குறுநூறு. | - 3. சிறுபாணாற்றுப்படை. |
| - 4. பதிற்றுப்பத்து. | - 4. பெரும்பாணாற்றுப்படை. |
| - 5. பரிபாடல். | - 5. முல்லைப்பாட்டு. |
| - 6. கலித்தொகை. | - 6. மதுரைக்காஞ்சி. |
| - 7. அகநானூறு. | - 7. நெடுநல்வாடை. |
| - 8 .புறநானூறு. | - 8. குறிஞ்சிப்பாட்டு. |
| | - 9. பட்டினப்பாலை. |
| | - 10. மலைபடுகடாம். |

சங்க இலக்கியங்கள் தமிழில் தோன்றும் பெரும்பாலான இலக்கிய வகைப்பாடுகளுக்கு ஊற்றுக்கண்ணாகத் திகழுகின்றன. இவை பண்டைத் தமிழ் வேந்தர், புலவர், மக்கள் ஆகியோரின் கல்வி மேம்பாடு, வீரம், கொடைத்திறம், புகழ், ஆட்சித்திறன், வாழ்க்கை நிலை ஆகியவற்றை இலக்கியச் சுவையுடன் தருகின்றன.

## சங்க காலம் தமிழிலக்கிய வரலாற்றில் பொற்காலம்

தமிழ் இலக்கிய வரலாற்றிலும், தமிழ்ச் சமூக வரலாற்றிலும் சங்ககாலம் பொற்காலமாகக் கருதப்படுகின்றது. பண்டைத் தமிழ் மக்கள் உயரிய நாகரிகமும் பண்பாடும் பெற்றுப் பெருமையுடன் வாழ்ந்தனர். பெருமையும்,

மகிழ்ச்சியும் பெற்று வாழ்ந்திட, கல்வி, வீரம், புகழ், கொடை ஆகியன சிறப்பாகத் துணைபுரிந்தன. சங்க இலக்கியங்களின் கருத்தியல் வளமும், படைப்பாக்க நெறிகளின் நுட்பத்திறனும் இலக்கிய ஆர்வலர்களால் வியந்து அலசப்படுகின்றன.

## சங்க இலக்கியத்தில் கல்விசார் பண்பாடு

சங்க காலத்தில் வாழ்ந்த எல்லாத் தரப்பு மக்களும் கல்வி அறிவு பெற்றிருந்தனர். என்பதற்குப் புறநானூற்றில் உள்ள அரசாகளும் பெண்பாற் புலவர்களும் சான்றாக அமைகின்றனர். அவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள்.

### அரசர் அரசியர்...

1. பாண்டியன் நெடுஞ்செழியன்
2. பாரி மகளிர்

### பெண்பாற் புலவர்கள்.

1. ஔவையார்
2. அள்ளூர் நன்முல்லையார்
3.ஆதிமந்தியார்..
4. காக்கை பாடினியார்
5. ஒக்கூர் மாசாத்தியார்
6. பாரி மகளிர்
7. மறோக்கத்து நப்பசலையார்
8. வெறிபாடிய காமக்கண்ணியார்
9.பெருங்கோழி நாயகன் மகள் நக்கண்ணையார்
10.பொன்முடியார்
11.காவற்பெண்டு
12.குறமகள் இளவெயினி
13.பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு

மாந்தர்க்குப் பெருமிதத்தை அளிக்கவல்ல நான்கு நிலைக்களன்களான கல்வி, தறுகண், இசைமை, கொடை என்பவற்றில் முதன்மையானது கல்வி. கல்வியை முதல் நிலையில் குறிப்பிடக் காரணம் பிற நிலைக்களன்களைப் பெறுவதற்குக் கல்வியே அடிப்படை என்பதனைப் பின்வரும் கலித்தொகைப்பாட்டினால் புரிந்துகொள்ள முடியும்.

### கல்விப்பெருமிதம்

வல்லார்முன் சொல்வல்லே னென்னைப்
– பிறர்முன்னர்க்
கல்லாமை காட்டி யவள். கலி.141.

(கற்றவர் முன் அவர் போற்றும் வகையில், சொல்லாட வல்லவன் நான் என்பது கல்விப்பெருமிதம் ஆகும்.)

### கல்வியின் இன்றியமையாமை

உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும்
பிற்றைநிலை முனியாது கற்ற னன்றே.
புறம்.183.1–2.

(கல்வி கற்றுத்தரும் ஆசிரியரை, மாதா, பிதா, குரு, தெய்வம் என்பதில் தெய்வத்திற்கு முற்பட்ட நிலையில் வைத்துப்போற்றினர். தனது ஆசிரியனுக்குத் துன்பம் நேரிடும் போது, பல உதவிகள் செய்தும், மிகுந்த பொருள் கொடுத்தும், ஆசிரியனை வழிபட்டு வணங்கி நின்றும் கல்வி கற்கவேண்டும் என்பதை நெடுஞ்செழியன் எனும் மன்னனே பாடினார்.)

### கல்வி உடையோன் பெருமை

வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்
கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவனு மவன்கட் படுமே.
புறம்.183.8–10

( சங்க காலத்தில் நால்வகை வருணத்தில் கீழ்க்குலத்தைச் சோந்த ஒருவன் கல்வி அறிவு பெற்றவனாக இருப்பானாயின் மேற்குலத்தைச் சார்ந்தவன் அவனிடம் சென்று வழிபட்டு நின்று போற்றுவான்.)

ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக வென்னா தவருள்
அறிவுடை யோனா றரசுஞ் செல்லும்.
புறம்.183.5–7.

(ஒரே குடியில் பிறந்தவர்கள் பலர் இருந்தாலும், அரசுப் பொறுப்பை ஏற்க, 'மூத்தோன் வருக' என்று சொல்லாமல் அறிவுடையவன் வழியே அரசும் செலலும்.)

பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளும்
சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியும்
புறம்.183.3–4

(தன்வயிற்றில்பிறந்தபிள்ளைகளிடையே தாய் எந்த ஒரு காரணத்தாலும் வேறுபாடு காட்டமாட்டாள். ஆனால் அத்தாயின் மனமும் கல்லாதவனை விரும்பாமல் கல்விச் சிறப்பால் கற்றவனையே நாடுவாள்)

ஈன்ற தாயோ வேண்டா எல்லள்
கல்வியெ னென்னும் வல்லான் சிறாஅன்

புறம்.346-2-3

ஒரு வயிற்றில் பிறந்த பிள்ளைகளில மூத்தவன் வீரனாக இருப்பினும் இளையவன் கல்வி உடையவனாக உள்ளான் என்று ஒரு தாய் பெருமிதப்படுவாள்.

### பகைவரும் புகழும் கல்வி

நிலவரை நிறீஇய நல்லிசைத்
தொலையாக் கற்பநின் றெம்முனை யானே.

பதிற் –.80 : 16–17.

(நல்ல புகழும் கல்வியும் உடையவன் பகைவரை எளிதில் வெற்றி கொள்வான் எனப் பாடுகிறார் அரிசில் கிழார்.)

### கல்வியில்லாதோர் இழிபு

தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்

மாய்தல் உண்மையும் பிறத்தல் உணமையும்

அறியாதோரையும் அறியக்காட்டி.

புறம்–27 :11––13.

### சான்றோர்

சான்றோ னாக்குதல் தந்தைக்குக் –கடனே.

புறம் – 312 : 2

சான்றோர் உரைப்பர்த் தெளிகுவர். கொல்லென –பதிற்: 73:15

சங்ககால மக்கள் கல்வியின் இன்றியமையாமையை நன்கு உணர்ந்திருந்ததுடன் கல்வி பெற்றவனைச் சாதி வேறுபாடு காட்டாது போற்றி உள்ளனர். பகைவரே கூட கல்வி உடையவனைப் போற்றி மதித்திருந்தனர். வானவீதியையும் ஆராய்ந்து அறியும் திறன் பெற்றிருந்த அவர்களின் நுட்ப அறிவு போற்றத்தக்கது.

கல்வி அறிவு பெற்றவனைச் சான்றோன் என்று போற்றிய அதேசமயம் கல்வி அறிவு பெறாதவர்களை இழிவாகவே கருதியிருந்தனர். தன்மகனைச் சான்றோன் ஆக்குதல் தந்தையின் கடமையாக எண்ணி வாழ்ந்துள்ளனர்.

சங்கப் பாடல்களை யாத்த 473 கவிஞர்களில் 41 பேர் கவிதாயினிகளாக விளங்கினர் என்பதை அறியும்கால் அக்காலத்திலேயே பெண்கள் எழுத்தறிவும் விழிப்புணர்வும் பெற்றிருந்தனர் என்பதை உணரமுடிகிறது. முத்தமிழால் புலவர்களும், புலவர்களால் தமிழும் வளர்ந்த வரலாற்றினைச் சொல்லும் சங்க இலக்கியப் படைப்புகள் மூலம் சங்ககாலச் சமுதாயத்தின் கல்விசார் பண்பாட்டினை அறிய முடிகிறது.

சங்ககாலக் கவிதைகள் தமிழரின் புராதன இலக்கியப் படைப்புகள் என்று பெருமித உணர்வினைத் தருவதோடல்லாமல், அவற்றின் மொழி, சொல்லாடல்கள், தொடரமைப்பு, கவிதைச்செறிவு மற்றும் சிந்தனைப் போக்குகளையும் அக்காலத்தில் அக்கவிஞர்கள் ஈட்டிய கல்விசார் பண்பாட்டினையும் அறியத் தருகின்றன.

தென்னன் மகளே!
திருக்குறளின் மாண்புகழே!
இன்னறும் பாப்பத்தே!
எண்தொகையே ! நற்கணக்கே!
மன்னும் சிலம்பே!
மணிமே கலைவடிவே!
முன்னும் நினைவால்
முடிதாழ வாழ்த்துவமே!

–பாவலரேறு பெருஞ்சித்திரனார்

# Oxygen எனும் வளியின் வேர் மூலமும் தமிழின் அஃகும் தீயதையும்



திரு. இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக்கழகம், மலேசியா

உயிர்வளி எனும் இவ்வளிமம் 1774 இல் தான் கண்டறியப்பட்டது. நம்மைச் சூழ்ந்து உயிர்வளி என்கின்ற தீயதை இருந்தாலும் மேலை நாட்டவர் இக்காலத்தில்தான் அறிவியல் முறைப்படி கண்டறிந்தனர். யோசப்பு பிரிசுலி , காரல் வில்கம் கீல் (Joseph Priestley and Carl Wilhelm Scheele) எனும் இருவரே இதனைக் கண்டறிந்தவராகக் குறிப்பிடப்படுகின்றனர். இதரத் தீயதையை (HgO) வெப்பமூட்டும் வேளையில்தான் இவ்வளிமத்தை இவர்கள் கண்டறிந்தனர். திரு யோசப்பு பிரிசுலி இதற்கு எரிப்பாற்றல் வளி என்றும் திரு காரல் வில்கம் கீல் தீ வளி என்றும் பெயர் வைத்தனர். ஆனால் அந்தோனி இலவோசியர் (Antoine Lavoisier) என்பவர்தான் இதற்கு ஆக்சியன் oxygen எனப் பெயர் சூட்டினார்.

இந்த உயிர்வளி அல்லது தீயதை என்கின்ற வளிமத் தனிமத்தின் அணு எண் 8. இதன் அணு எடை 15.9994 ஆகும். இதன் உருகு நிலை −218.79°C நூற்றியமாகும் . கொதி நிலை−182.95°C நூற்றியம். புற வெப்ப நிலையில் இது வளிம நிலையில்தான் இருக்கும். இது காற்றில் 21 விழுக்காடு நிறைந்துள்ளது.

உல்>அல்= கூர்மை / வெப்பப் பொருள் வேர்.

அல்>அள்>அடு= வெப்பம்.

அல்>அடு>அட்டு= வெப்பம்.

அட்டாலும் பால் சுவை குன்றாது.

உல்>அல்= கூர்மை.

அல்>அக்கு= கூர்மை, நுண்மை.

அக்கு>அஃகி= கூர்மை.

அஃகி அகன்ற அறிவு...~ குறள்.

அல்>அள்>அட்கு>அக்கு>அக்கி= வெப்பத்தால் உருவாகும் நோய்.

அக்கு>அக்கி>அக்கினி= தீ.

அக்கினி>>வடசொல் எனச் சொல்லப்பெற்றாலும் அதன் மூலம் தமிழே .

அல்>அக்கி> acid.

Acid>> ac = sharp.

gaseous chemical element, 1790, from French oxygène, coined in 1777 by French chemist Antoine-Laurent Lavoisier (1743-1794), from Greek oxys "sharp, acid" (from PIE root *ak- "be sharp, rise (out) to a point, pierce") + French -gène "something that produces" (from Greek -genes "formation, creation;" see -gen).

Intended to mean "acidifying (principle)," it was a Greeking of French principe acidifiant. So called because oxygen was then considered essential in the formation of acids (it is now known not to be). The element was isolated by Priestley (1774), who, using the old model of chemistry, called it dephlogisticated air. The downfall of the phlogiston theory required a new name, which Lavoisier provided. Oxygen-mask is attested from 1912.

என இணையத் தள ஆங்கில வேர்ச்சொல் அகரமுதலி விளக்கம் அமைந்துள்ளது.

## இந்தோ ஐரோப்பிய வேர்ச்சொல் அகர முதலியின் விளக்கம் :

ak- Sharp. (Oldest form *hzek-, colored to *hjak-) Suffixed form *ak-ya- a. EDGE; SELVAGE, from Old English ecg, sharp side, from Germanic *agjā; b. EGC2 from Old Norse eggja, to incite, goad, from German *agian. 2. Suffixed form *ak-u-. a. EAR?, from ou English æhher, ëar, spike, ear of grain, from German *ahuz-; b. ACICULA, ACUITY, ACULEATE, ACUMEN ACUPUNCTURE, ACUTE, AGLET, AGUE, EGLANTI from Latin acus, needle; C. ACEROSE, from Latin ac chaff. 3. Suffixed form *ak-i-. ACIDANTHERA, from Greek akis, needle. 4. Suffixed form *ak-men-, stone sharp stone used as a tool, with metathetic variant *ka-men-, with variants: a. *ka-mer-. (i) HAMMER from Old English hamor, hammer; (ii) HAMERKOP from Middle Dutch hamer, hammer. Both (i) and (ii) from Germanic *hamaraz, hammer. b. *ke-men. (probable variant). HEAVEN, from Old English heofon, hefn, heaven, from Germanic *hibin-, "the stony vault of heaven," dissimilated form of *himin-. 5. Suffixed form *ak-onā-, independently created in: a. AWN, from Old Norse ögn, ear of grain, and Old English agen, ear of grain, from Germanic *aganā; and b. PARAGON, from Greek akonē, whetstone. 6. Perhaps suffixed form *ak-en-i- (although the details of the formation remain obscure). ANACONDA, from Sanskrit aśanih, missile, thunderbolt. 7. Suffixed lengthened form *āk-ri-, ACERATE, ACRID, ACRIMONY, EAGER'; CARVACROL, VINEGAR, from Latin ācer, sharp, bitter. 3. Suffixed form *ak-ri- (in further suffixed Prototalic form akritho-, although the details of the formaion are obscure): ACERBIC, EXACERBATE, from Latin cerbus, bitter, sharp, tart. 9. Suffixed (stative) form ak-e-. ACID, from Latin acēre, to be sharp. 10. Suf xed form *ak-ēto-. ACETABULUM, ACETIC, ACETUM; STER, from Latin acētum, vinegar. 11. Suffixed form ak-mä-. ACME, ACNE, from Greek akmē, point. 12. uffixed form *ak-ro-. ACRO-; ACROBAT, ACROMION, om Greek akros, topmost. 13. Perhaps suffixed form ik-t-in Greek aktīs (stem aktīn-), ray; see nekw-t-. 14. Suffixed o-grade form *ok-su- AMPHIOXUS, OXAS, OXYGEN, OXYTONE, OXYURIASIS, PAROXYSM, from Greek

oxus, sharp, sour. [Pokorny 2. ak- 18, 3. Kem 566]

இதில் தமிழின் கூர்மையைக் குறிக்கும் அக்கு எனும் சொல்லோடு இதனை நாம் பொருத்திப் பார்க்க முடியும்.

தமிழின் அல்> அக்கு இங்கு வேர் தொடர்பு கொண்டுள்ளது என்பதை வெளிப்படையாகவே அறிய முடிகின்றது.

கூரிய வெப்பம் குத்தும், குத்துவது எரிக்கும். சூரியன் எனும் சொல்லும் சுல் எனும் குத்தல் பொருளில் வந்த வேர்ச்சொல்லாலானதே. எனவே, உல்>அல்>அள்>அட்டு= வெப்பம்,

அடு>அட்டில்

அடு>அடுப்பு

அல்>அக்கு>அக்கி= வெப்பம்

அல்>அஃகு= கூர்மை, நுண்மை

உல் > அல் எனும் தமிழ் வித்திலிருந்தே oxygen, acid முதலான ஆங்கிலச் சொற்கள் உருவானதாக நமக்குப் புலப்பட்டது.

Oxygen எனும் சொல்லுக்கு நாம் உயிர்வளி, தீயதை எனும் அருந்தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துகின்றோம்.

உயிர்கள் உயிர்க்க இவ்வளி உயிர்ப்பானதாகையால் உயிர்வளி என்றும் தீய்க்கும் தன்மையதால் தீயதை என்றும் நாம் கூறினோம். தீயதை இன்றி தீ எரியாது. இத்தீயதை குறிப்பிட்ட மாழைகளையும் (உலோகங்களையும்) தீய்க்கும்.

FrO==> Ferum oxyde ==> இரும்புத்தீயதை ஆகும்.

உண்ணும் உணவு தீய்க்கப் பெற்றுதான் செரிக்கிறது. இக்கால் ஆற்றலும் வெளிப்படுகிறது. எனவே உயிர்வளி, தீயதை முதலான அருந்தமிழ்ச் சொற்கள் அறிவியல்

அருந்திறல் வல்லரால் உருவாக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இதன் இத்தகு இயல்பினை உணர்ந்தே பூதியல் அறிஞரான இல. க. இரத்தினவேல் அவர்கள் இதற்குத் தீயதை எனும் அருந்தமிழ்ப் பெயரைச் சூட்டினார். இச்சொல் இதனால் உயிர்கள் ஏன் உயிர்க்கின்றன எனும் அறிவியல் உண்மையையும் மாழைகளின் மீது இவ்வளிமத்தால் ஏற்படும் வினைப்பாட்டையும் தெளிவுறுத்துகின்றது.

தீய்க்கும் தன்மையதால் oxidation எனும் சொல்லைத் தீச்சலாதல் எனலாம். Oxidants தீச்சலிகள் ஆகும். Antioxidants தீச்சலன்றிகள் ஆகலாம். Anti என்பது அன்றி எனும் தமிழின் திரிபே. (அல் > அன் > அன்றி )

சமைக்கும் உணவு தீ கூடுதலாகிப் போனால் அடிபிடித்து விடும். அல்லது தீய்ந்து போய் விடும். தீய்தல், தீஞ்சல் முதலான சொற்கள் மக்கள் வழக்கிலேயே உள்ளன. உணவு தீய்க்கப்பெற்றதால் ஏற்பட்ட விளைவே தீய்ஞ்சல். இது oxidation தீய்த்தலின் விளைவேயாகும். இச்சொற்கள் வழி தீயதை சேர்ந்த மாழையின் சேர்மங்களுக்கும் தீயதை சார்ந்த வேதியியல் பொருள்களுக்கும் நாம் சொல்லமைக்க முடியும். உயிர்வளி எனும் சொல்லின் வழி இத்தகு சொற்களுக்கு உயிர் எனும் அடிச்சொல்லைச் சேர்ப்பதை விட தீய்த்தல் வினையால் அமைந்த தீயதை எனும் சொல்லின் வழி வந்த சொற்களை ஆள்வதே சிறப்பு.

உயிர்வளி உயிர்கள் உயிர்க்க இன்றியமையாதது. உயிர்வளியால் உயிர் இயக்கத்தைச் சுட்டுதற்கு உயிர்வளி இடம் நோக்கியே பொருந்துவதாகும். உயிர்வளியால் உயிர்ப்பு, உயிரியர் எனும் சொற்கள் நிகண்டுகளிலும் கழக இலக்கியங்களிலும் ஆளப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

### திவாகர நிகண்டில்

"வாதம் கூதிர் வங்கூழ் கால் வளி உயிர்ப்பே காற்றின் பெயர்" ( 1:37 ) என நேரடியாகவே உயிர்வளி உயிர்ப்பு எனும் தனிச்சொல்லாகவே குறிப்பிடப்படுகின்றது.

நம் கழக இலக்கியங்களில் உயிர் மூச்சு உயிர் எனும் தனிச்சொல்லாலேயே பல இடங்களில் குறிப்பிடப்படுகின்றது.

" ஒய்யெனச் சிறிது ஆங்கு உயிரியர்" ( நற்றிணை : 236:3)

உயிர் வாழ காற்று இன்றியமையாதது. அக்காற்றிலும் உயிர் வளி மிகமிக முதன்மையானது. இதன் நுட்பங்களை இன்றைய அறிவியல் விரித்துரைக்கின்றது.

இது போன்ற சொற்களை மேலும் ஆய்வோம் அறிவியல் தமிழை உயிர்ப்பிப்போம்.

### கலைசொற்கள் :

Antioxidants – தீச்சலன்றிகள்

Oxidants – தீச்சலிகள்

Anti – அன்றி

FrO==> Ferum oxyde ==> இரும்புத்தீயதை

Celsius – நூற்றியம்

Mercury oxide – இதரத் தீயதை (HgO)

Atomic Weight – அணு எடை

Boiling Point – கொதி நிலை

Melting Point – உருகு நிலை

---

> இனிமையும் நீர்மையும்
> தமிழ் எனலாகும்
> – பிங்கல நிகண்டு

# Lexicography



Dr. R. Pannirukaivadivelan, Associate Professor,
Tamil department, Vels Institute of Science, Technology
& Advanced Studies (VISTAS)

Abstract

The field of lexicography is growing by leaps and bounds. Most of the latest dictionaries are accompanied by a CD and websites. The hard copy of the dictionary is given in a digital format. Thus those who are accessible to a computer or laptop can utilize the digital version of the dictionary. Few users have loaded the dictionary in a cellphone for instant use of the dictionary. The technological advancement has started causing a paradigm shift in lexicography. This paper attempts to visualize the future of lexicography.

The future dictionaries will mostly be in the digital format. These dictionaries are called as 'E-dictionaries' (electronic dictionaries, accessible through internet). To achieve excellence in e-dictionaries we need the help and support of technologists. However, the basic scholarly work has to be done by lexicographers. To take the dictionaries to the next level, we need the co-operation of academics, educational institutions, private as well as government departments and technologists. Each one has a specific role to play. The major contributors will be:

1. Lexicographers
2. Corpus providers
3. Technologists

Basically lexicographers will compile the dictionary following the lexicographic principles. They will provide the headword, meaning, citations, labels, etc. Other than these, the lexicographers will assign new markers of fields such as 'synonyms', 'antonyms', 'etymology', 'pronunciation', 'usage', 'picture', 'encyclopedic detail', etc. If the user wants to see a rare plant, he/she may click the 'picture' component, which must lead him to view the picture. Other features have to follow similarly.

Corpus providers will supply the language corpus (which may be literature, newspapers, magazines, other dictionaries, text books) as well as video (Cinema and TV programs) and audio (Radio programs, etc.) contents. Here we mean the term corpus in a broad sense including all available information in this world. This information will be linked to the dictionary through tagging.

Finally the technologist must provide the hardware as well as software support to the compilers and also to the users. All the desktop computers, laptops, tablets, cellphones must have the necessary hardware support (processor, memory card, etc.) and also enabling software in an affordable manner.

# Lexicography**

The field of lexicography is growing by leaps and bounds. Most of the latest dictionaries are accompanied by a CD and websites. The hard copy of the dictionary is given in a digital format. Thus those who are accessible to a computer or laptop can utilize the digital version of the dictionary. Few users have loaded the dictionary in a cellphone for instant use of the dictionary. The technological advancement has started causing a paradigm shift in lexicography. This paper attempts to visualize the future of lexicography.

Lexicography is the art of compiling dictionaries. Dictionaries have existed for thousands of years. On the basis of content the dictionaries are classified into general dictionary, encyclopedia, glossary etc. other than these basic works dictionaries are classified as monolingual dictionary, bilingual dictionary, multilingual dictionary on the basis of languages used to define the meaning. Dictionaries are also classified as diachronic and synchronic on the principles of time. There are also specialized dictionaries such as etymological dictionary, pronunciation dictionary, reverse order dictionary, dictionary of antonyms, dictionary of synonyms, etc. In total dictionaries are reference works which store all types of information regarding language. The types of dictionaries are briefed hare because all of them will be integrated into a network in future.

The structure of an entry in a general dictionary will have a headword, superscript (if the word is a homonym), transliteration, pronunciation, grammatical label, usage label, sense number (if the word has more than one sense), meaning in the source language, meaning in the target language (if it is a bilingual dictionary), citation and source indication.

Dictionaries are used to know the meaning, usage, etc of a word. Let us assume that if an user want to know the meaning of the word talai 'head' and refers the Tamil Lexicon, he/she will find talai$^1$ and noun and talai$^2$ a verb. The noun talai$^1$ will have the following meanings.

1. Head
2. That which is first, best highest
3. Person of highest quality and rank
4. Leader; husband
5. Origin, beginning, source commencement
6. Top, apex
7. End, tip
8. Finish, close
9. Resem balance
10. Sky, ethereal region
11. Unit, person, hand
12. Postage stamp as bearing the king's head
13. Skull
14. Hair
15. A Locative case suffix
16. (adv.) In addition to
17. (Part.) Prefix with the force of preposition.

The verb talai$^2$ has five meanings. The user

will know that the word talai is used as a noun, verb adverb and particle (case suffix and prefix).

If the same user refers a modern Tamil dictionary (Cre-A:, 2008) to know the meaning of talai he will find two nouns. Talai[1] has four meanings and talai[2] only one meaning. In modern Tamil talai is not used as a verb. There are nearly 350 words derived from talai. The Tamil Lexicon supplement lists 38 words. So far we were describing about a paper or print dictionary. Let us imagine the future of dictionaries.

The future of lexicography is bright and it is in the hands of lexigraphers, corpus providers (or builders) and technologists. Each one has a specific role to paly in designing the dictionaries of future.

Lexicographers compile a dictionary. So far they were doing the job of collection of data, selecting the headwords, providing the meaning and citations, fixing the label and so on. Now they have to play a meticulous role of providing lot of clear ant links. The links may be of to know the following about a word the user is interested:

- Related words
- Pronunciation
- Etymology
- Synonyms
- Antonyms
- Related idioms
- Meaning in other language
- Translational equivalent
- Picture
- Encyclopedia detail

If the user wants to know the etymology of talai, a link should be provided by the lexicography to Dravidian etymological Dictionary (Burrow & Emenean, 1984) or Sanskrit Dictionary (Monier Monier Williams, 1899). Similarly to know the modern idioms a link should be provided to Idioms and phrases Dictionary (Subramanian, 1997). In the same manner several links have to be provided in the search page itself. This will enable the user to know and retrieve all the information about a word in one place.

The next role will be played by the corpus providers. The corpus may consist of literature, dictionaries, newspapers, magazines, textbooks, journals, research articles and teaching materials, as well as video (cinema and TV programs) and audio (Radio programs, lectures, etc.). In future all of them will available in the internet. The corpus has to be given in the hypertext format. The corpus builders must provide hyperlinks to access the corpus. Unless this is available the user cannot utilize the e-dictionaries satisfactorily.

Finally the technologist must provide the hardware as well as software support to the compilers, corpus providers and also to the users. In future each home will have a sophisticated computer with high speed internet connectivity with a cloud computing support. This will enable the user to use and utilize the e-dictionary for all purposes.

***Advantages:*** Now users have to refer many dictionaries or texts to know the meaning of a word. In future he will be able to access any information in any place at any time with any electronic gadget. The searching will be instant and can get all information in a single screen. Space of time would not be a constraint to the

user. While referring s paper or print dictionary the user has to search a word in the alphabetical order. In e-dictionary a word will appear at the instant the user types a word. All the information will be available in a single shot.

***Disadvantages:*** The technology is ruling will reign our life in future. The user must have are advanced gadget. The power to access the computer must be uninterrupted. All the linking systems must work without any technical fault. Last but not least the user will lose the beauty of touching, slowly turning the pages one by one and feeling proudly the ownership of a specific reference book.

Presently dictionaries are found in the print format and the same dictionary is also found in the digital format usable through the computer. Then the question arises, what sort of a change will be in the scenario of future course of lexicography. Now we are able to access the e-dictionary by loading them in a computer, laptop, cellphone or search and find through the internet. The user has to access the e-dictionary through search engine. For each search the user sets hundreds or thousands of links. The user has to select by viewing each link. The information is scattered and found in many places. In future the user can access the searching word in a single window. The search engine will function in the backdrop. The dictionary search will reach the corpus inherently. Exact or specific information only will reach the users window. A lot of time will be saved and completes information, right from the meaning of the word to the pictorial illustration with encyclopedic details will be provided to the user. But the academia's, government and private institutions, educational institutions and corporate companies must strive hard devotedly to achieve this dream become true.

At this juncture let us remind the words of Professor V. Jayadevan (2013), a pioneer in the field of lexicography, who predicts, "Both encoding lexical items (i.e., dictionary-making of editing) and decoding them (i.e., using dictionaries) can be efficiently be done by only means of electronic devices such as the computer'.

(**We would like to thank Professor Dr. V. Jayadevan, (Chief Editor, Tamil Lexicon Revision Project, University of Madras, Chennai and former Professor& Head, Department of Tamil Language, University of Madras) who was kind enough to go through the whole draft and said some valuable comments and suggestions, which enriched the value of this research paper.)

## References

1. Annamalai, E. (2009). A Handbook of Tamil verbal Conjugation. USA. Dunwoody press.

2. Burrow, T. Emeneau, M.B. (1984). A Dravidian Etymological Dictionary. Oxford. Oxford University Press. II Edition.

3. Hornby, A.S. (1948). Oxford Advanced Learners's Dictionary. Oxford. Oxford University Press. Eighth Edition (2010 Reprint).

4. Jayadevan, V. (2013) "Theory of Lexicography" in the seminar papers Tholkappiyam: A Linguistic view from Traditional Approach. Trichy. Kaveri Women's college.

5. Monier Monier-Williams, Sir. (1899). A Sanskrit – English Dictionary. Oxford. Clarendon Press. I Edition (1976 Reprint).

6. Pannirukaivadivelan, R. (2010) Tamil Software (Ph.D. Dissertation). Chennai. University of Madras.

7. Ramakrishnan, S. & Regunathan, T.K. (2008). Kriyavin Tarkkalat Tamil Akarati [Cre-A: Dictionary of Contemporary Tamil (Tamil-Tamil-English)]. Chennai. Cre-A:.

8. Regunathan, T.K.(2012). Adverbs in Modern Tamil (Unpublished Ph.D. Dissertation). Annamalai Nagar. Annamalai University.

9. Robale, J.I.(1978). The Synonym Finder. Pensylvania. Rodale Press.

10. Stevenson, Angus. & Waite Maurice. (1911). Concise Oxford English Dictionary. Oxford. Oxford University Press. Twelfth Edition (2011 Reprint).

11. Subramanian, P.R. (1997). Tarkalat Tamil Maraputtotar Akarati [Dictionary of Idioms and plrrases in Contemporary Tamil (Tamil Tamil-English)]. Chennai Mozhi.

12. Savensen, BD. (2009). A Handbook of Lexicography. Newyork. Cambridge University press.

13. Vaiyapuri Pillai, s. (1924-1936). Tamil Lexicon (VI Vol. + Supplement). Chennai. University of Madras.

1. http://www.etymonline.com/

2. http://dictionary.reference.com/etymology/

3. http://www. oxfordreference.com/view/10.1093/acref/9780192830982.001.0001/acref-9780192830982

4. http://www.macmillandictionary.com/british-and-american-pronunciation.html

5. http://www.thefreedictionary.com/pronunciation

6. http://www.merriam-webster.com/dictionary/pronunciation

7. http://www.speech.cs.cmu.edu/cgi-bin/cmudict

8. http://dictionary.cambridge.org/help/phonetics.html

9. http://www.merriam-webster.com/dictionary/spell

10. http://lookwayup.com/free/

11. http://thesaurus.com/

12. http://synonyms.memodata.com/

13. http://dico.isc.cnrs.fr/dico/en/search

14. http://www.synonym.com/

15. http://dictionary.reference.com/browse/antonym

16. http://www.antonymswords.com/

17. http://www.oed.com/

18. http://www.oxforddictionaries.com/

19. http://www.ldoceonline.com/

20. http://www.pearsonlongman.com/dictionaries/

21. http://www.collinsdictionary.com/

# தமிழ்க் கலைக்கழகத்தின் 131–ஆவது கூட்டம்



21.04.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 131–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு. அ.மதிவாணன், திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். திரு.ஆ. அரிமாப்பாமகன் மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 212 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# தமிழ்க் கலைக்கழகத்தின் 132–ஆவது கூட்டம்



25.04.2023 ஆம் நாள், தமிழ்க் கலைக்கழகத்தின் 132–ஆவது கூட்டம் அகரமுதலி இயக்ககத்தில் இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் குபாலசுப்பிரமணியன், ஆகியோர் பங்கேற்றனர்.திரு.ஆ. அரிமாப்பாமகன், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகரபாபு மற்றும்அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்துகொண்டனர். கூட்டத்தில் 270 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

# அகரமுதலி இயக்ககத்தில் புலனவழி கலைச்சொல்லாக்க நுண்பயிலரங்கத் திட்டம் தொடக்கம்!




செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 11.04.2023ஆம் நாள், கலைச்சொல்லாக்க நுண்பயிலரங்கம் நடைபெற்றது. சொல்லாக்க நுண்பயிலரங்கத்திற்குப் புலனத்தை எவ்வாறு துணைக்கருவியாகப் பயன்படுத்துவது என்று வல்லுநர்குழுவால் திட்டமிடப்பட்டது. அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையில் நடைபெற்ற இந்நிகழ்வில், சவுதி அரேபியா, மெய்நிகர் அறிவியல் தமிழிருக்கை முதன்மை அறிவியல் மதியுரைஞர் மரு. முனைவர் மு. செம்மல் அவர்கள் முன்னிலை வகித்தார். இப்பயிலரங்கில் முனைவர் செம்மல் அவர்கள் புலனக்குழு வழியாக அனுப்பிய மருத்துவத்துறை சார்ந்த 25 சொற்களுக்குத் தமிழ்க் கலைச்சொல்லாக்கங்கள் வடிவமைக்கப்பட்டன.

இத்திட்டத்தின் மூலமாக எதிர்காலங்களில் சொற்குவை உலகம் முழுவதும் உள்ள தமிழ் சார்ந்த நிறுவனங்கள், அமைப்புகள், தமிழார்வலர்களோடு இணைந்து கலைச்சொல்லாக்க நுண்பயிலரங்கங்களைத் தொடர்ச்சியாக நடத்தவுள்ளது. இத்திட்டத்திற்குத் தமிழார்வலர்கள், தமிழறிஞர்கள், பேராசிரியர்கள், ஆய்வாளர்கள், தமிழமைப்பினர் ஆகியோர் தங்களின் ஒத்துழைப்பை நல்க வேண்டும் என்றும், தனித்துவமான கட்டமைப்புடன் மாணவர்களிடையே கலைச்சொல்லாக்க அறிவுசார் திறன் வளர்ப்பு முறைமையான இப்பயிலரங்கில் 7–10பேர் வரை பங்குகொள்ள முடியும் என்றும், அமர்வானது 30–45 நிமிடங்கள் மட்டுமே நடைபெறும் என்றும், ஓர் அமர்வுக்கு ரூ. 150 (ரூபாய் நூற்றைம்பது) என்ற வகையில், இந்நிகழ்வுகளுக்கான பொருளாதார உதவிகளை ஒரு ரூபாய் அறிவியல் தமிழ் மன்றம் வழங்கும் என்றும் மரு. செம்மல் அவர்கள் எடுத்துரைத்தார்.

பயிலரங்கில் அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர், தொகுப்பாளர்கள், சுருக்கெழுத்துத் தட்டச்சர், இளநிலை உதவியாளர் உள்ளிட்டோர் கலந்துகொண்டு கலைச்சொற்களைச் சீராக்கம் செய்வது தொடர்பான கருத்துகளை வழங்கினார்கள். இன்று நடைபெற்ற கலைச்சொல்லாக்கப் பயிலரங்கில் ஆய்வுக்குட்படுத்தப்பட்ட சொற்கள்:

General Anatomy – பொது உடற்கூற்றியல்
General Physiology – பொது உடலியங்கியல்
Cell Physiology – உயிரணு உடலியங்கியல்
Allergy – ஒவ்வாமை
Immunology – நோய் தடைக்காப்பியல்
General Biochemistry – பொது உயிர்வேதியல்
General Pathology – பொது நோயியல்
Anatomical pathology – உடற்கூற்று நோயியல்
Blood banking and transfusion medicine – குருதி வைப்பகமும் குருதிமாற்று மருத்துவமும்
Chemical Pathology –வேதி நோயியல்
Clinical pathology – மருத்துவம்சார் நோயியல்
Cytopathology – உயிரணு நோய் ஆய்வியல்
Forensic pathology – தடய நோயியல்
Genetic Pathology – மரபுவழி நோயியல்
Hematology – குருதியியல்
Immunopathology – தடைக்காப்பு நோயியல்
Molecular pathology – மூலக்கூற்று நோயியல்
Neuropathology – நரம்பு நோயியல்
Pediatric pathology – குழந்தை நோயியல்
Basics of General Microbiology – பொது நுண் உயிரியல் அடிப்படைகள்
Bacteriology – நுண்ணுயிரியியல்
Virology – நச்சுயிரியியல்
Parasitology – உறிஞ்சு உண்ணியில்
Basics of General Forensic Medicine – பொது தடயவியல் மருத்துவ அடிப்படைகள்

# அகரமுதலி இயக்ககத்தில் பாவேந்தர் நினைவேந்தல் கூட்டம்!



உயர்தனிச் செம்மொழியாம் அன்னைத் தமிழ் மொழியை உயிராகவும் உயிருக்கு மேலாகவும் போற்றிய உலக மகா கவிஞர் பாவேந்தர் பாரதிதாசனின் 59வது ஆண்டு நினைவு நாளை முன்னிட்டு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 21.04.203ஆம் நாள் பாவேந்தர் நினைவேந்தல் கூட்டம் நடைபெற்றது.

கூட்டத்திற்கு அகரமுதலி இயக்கக இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்கள் தலைமையேற்று, உலகத்திலேயே தாய்மொழியை உயிராக மதித்துப் போற்றிய முதல் உலக மகாகவிஞன் பாவேந்தர் பாரதிதாசன் என்றும், அவரது வழியில் தாய்மொழிப் பற்றோடு வாழ்ந்து, தாய்தமிழ்மொழியின் மேன்மைக்காகத் துறைதோறும் துறைதோறும் துடித்தெழுந்தே..... கலைச் சொல்லாக்கம் கண்டு மகிழ்வோம்....அதுவே பாவேந்தரின் பைந்தமிழ்த் தொண்டுக்கு நாம் செலுத்தும் உண்மையான புகழஞ்சலி என்று தெரிவித்தார்.

கூட்டத்தில், அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்க் கலைக்கழக அலுவல் சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், திரு. அ.மதிவாணன் ஆகியோர் கலந்துகொண்டு பாவேந்தரின் தமிழுணர்வு குறித்தும், தமிழ்ப் பணிகள் குறித்தும் எடுத்துரைத்தனர்.அறிவியல் ஒளி ஆசிரியர் திரு.நா.சு.சிதம்பரம், அகரமுதலி இயக்ககப் பதிப்பாசிரியர்கள், தொகுப்பாளர்கள் உள்ளிட்டோர் பங்கேற்ற இந்நிகழ்வின் நிறைவில் தொகுப்பாளர் முனைவர் வே. கார்த்திக் நன்றி கூறினார்.

# பாவேந்தரின் "எந்நாளோ?" பா மொழிபெயர்ப்பு



முனைவர் கு.பாலசுப்பிரமணியன்
மேனாள் மொழிபெயர்ப்புத் துணை இயக்குநர்
தமிழ்நாடு அரசு



## Would I ever be blessed with to hear...

Would I ever be blessed with to hear
The sweet and endearing message
That all the People of Tamil land are Learned men
Who have mastered all the fields of knowledge
Who are great intellectuals
And are also valiant souls
Who are kind and merciful in their dispensations...
That they have really attained
The highest peaks of name and fame
And are living in peace and Ecstasy? 1

Would I ever be blessed with to hear
That the whole of the Tamil Land
Full of the Libraries everywhere
which have been added and enriched with
Great works on all the disciplines of learning
Such as Arts, Sculpture, Mathematics and Astronomy
And Science and Technology, Philosophy and
Literature
which have been endowed with
Modern and innovative knowledges on earth? 2

Would I ever be blessed with to hear
A message that shall read as this:
"The whole world is eagerly anxious
To see and listen to our beautiful
Mother-tongue Tamil, and also the wonderful
Poetry of Tamils in a thousand languages
That are spoken by the people around the globe!"
And which shall flow as a flood of honey
Countinuous and unabated into my ears!
who ever will be the great soul
That shall convey this to me? 3

## எந்நாளோ?

என்னருந் தமிழ்நாட்டின் கண்
எல்லோரும் கல்விகற்றுப்
பன்னறும் கலைஞானத்தால்,
பராக்கிரமத்தால், அன்பால்,
உன்னத இமயமலைபோல்
ஓங்கிடும் கீர்த்தி எய்தி
இன்புற்றார் என்று மற்றோர்
இயம்பக் கேட்டிடல் எந்நாளோ? 1

கைத்திறச் சித்திரங்கள்,
கணிதங்கள் வான நூற்கள்
மெய்த்திற நூற்கள், சிற்பம்,
விஞ்ஞானம், காவியங்கள்
வைத்துள தமிழர் நூற்கள்
வையத்தின் புதுமை என்னப்
புத்தகசாலை எங்கும்
புதுக்குநாள் எந்தநாளோ? 2

தாயெழிற் றமிழை, என்றன்
தமிழரின் கவிதை தன்னை
ஆயிரம் மொழியிற் காண
இப்புவி அவாவிற் றென்ற
தோயுறும் மதுவின் ஆறு
தொடர்ந்தென்றன் செவியில் வந்து
பாயுநாள் எந்தநாளோ,
ஆரிதைப் பகர்வார் இங்கே? 3

பார்த்தொழில் அனைத்தும் கொண்ட
பயன் தரும் ஆலைக்கூட்டம்
ஆர்த்திடக் கேட்பதென்றோ?
அணிபெறத் தமிழர்கூட்டம்
போர்த்தொழில் பயில்வதெண்ணிப்
புவியெலாம் நடுங்கிற்றென்ற
வார்த்தையைக் கேட்டு நெஞ்சு
மகிழ்ந்து கூத்தாடல் என்றோ? 4

Would I ever be blessed with to hear
The noise of Industrial Establishments of all sorts
that are functioning spread all over the World
That are replicated in our own land
Which would produce all the products
giving immense benefits to the mankind!
Would I ever hear a sweet message
That shall run thus:
"Large gatherings and groups of Tamils are
Engaged in a well disciplined way
In various "Trainings of Military exercises!"
And the news when spread far and wide
Set tremors' in the countries around the globe!
And would I ever on hearing that, rejoice
Merrily and jump and dance with joy! 4

வெள்ளம்போல் தமிழர் கூட்டம்
வீரங்கொள்கூட்டம்; அன்னார்
உள்ளத்தால் ஒருவரே மற்
றுடலினால் பலராய்க் காண்பார்
கள்ளத்தால் நெருங்கொணாதே;
எனவையம் கலங்கக்கண்டு
துள்ளும்நாள் எந்நாள்? உள்ளம்
சொக்கும் நாள் எந்தநாளோ? 5

Would I ever be blessed, to rejoice merrily
At the sight of the world, which might tremble to see
The surging crowed of Tamils
That had converged into an ocean of humanity
And might whisper in fear:
"These Tamils are a valiant lot,
who are united as one in soul
But seen apart in multitudes!
None can dare to go near them
With an evil intention!"
Thus,
Would ever I, on discerning this,
Be overwhelmed with joy at heart? 5

குறிப்பு

பாவேந்தர் பாரதிதாசனின் "எந்நாளோ?" எனும் தலைப்பிலான 9 பாக்களில் இந்த இதழில் இடம்பெற்றுள்ள முதல் இரண்டு பாக்களும், அடுத்த இதழில் இடம்பெறவுள்ள 9ஆவது பாவும் 1996–1997ஆம் ஆண்டு தமிழ்நாடு அரசின் வரவு – செலவுத் திட்ட உரையில் தமிழிலும் ஆங்கிலத்திலும் இடம்பெற்றுள்ளன.

India's No.1 English Evening Daily
An Inspiring National Daily That Touches Your Heart
EVENING TAMIL NADU

# மாலை தமிழகம்

Maalai Tamizhagam — Evening Tamil Daily
www.maalaitamizhagam.com — e-mail: maalaitamizhagam@gmail.com

சென்னை Chennai 24-4-2023 திங்கட்கிழமை (சித்திரை 11) வெளியூர் Out Station 25-4-2023 Volume - 14 Issue -37 பக்கம் Pages 6 விலை Price ₹.3



## தமிழுக்கு வளம் சேர்க்கும் அகரமுதலி சொற்குவை!





கட்டுரையாளர்
முனைவர் கோ.விசயராகவன்
இயக்குநர், தமிழ்நாடு அரசு செந்தமிழ்ச்சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககம்.

Owned Published and printed Maalaitamizhagam Evening Daily by K.Sarvodayam published from M-37D P.T.Rajan Salai K.K.Nagar, Chennai-78 and Printed at New Merit Printers No.14/51 Reddy Kuppam Road, Saidapet, Chennai-600 015. Editor K.Sarvodayam

கோவை
திருச்சி
திருநெல்வேலி
வேலூர்
தருமபுரி
புது தில்லி
விழுப்புரம்
நாகப்பட்டினம்
http://www.dinamani.com

# தினமணி

ஞாயிற்றுக்கிழமை
23 ஏப்ரல் 2023
சென்னை
18 பக்கங்கள் ரூ.10

## பத்து லட்சம் சொற்களைக் கடந்தது 'சொற்குவை'

**சென்னை, ஏப். 22:** தமிழக அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலித் திட்ட இயக்ககம் சார்பில் உருவாக்கப்பட்ட 'சொற்குவை' தளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்ட சொற்களின் எண்ணிக்கை 10 லட்சத்தை கடந்துள்ளது.

அந்த இயக்ககத்தின் இயக்குநர் கோ.விசயராகவன் வெளியிட்ட செய்திக் குறிப்பு: சொற்குவை தளத்துக்கு தமிழ்க் கலைக்கழகம், வல்லுநர் குழுக் கூட்டம், சொற்குவை மாணவத் தூதுவர் பயிற்சித் திட்டம், துறை சார் புதிய கலைச் சொற்கள் கலந்தாய்வுக் கூட்டம், இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் போன்றவற்றின் மூலம் சொற்கள் பெறப்பட்டு பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

இதுவரை 130-ஆவது கலைக்கழகக் கூட்டங்கள் நடத்தப்பட்டு 42,926 சொற்களுக்கு ஏற்பளிக்கப்பட்டு சொற்குவை வலைதளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன.

அதேபோல இதுவரை 16 அரசுத் துறைகளுக்குச் சென்று, துறை சார்ந்த அலுவலர்களுடன் கலந்தாய்வுக் கூட்டம் நடத்தப்பட்டு அத்துறையில் புழங்கும் ஆங்கில சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்கள் வல்லுநர் குழுவால் தரப்படுத்தப்பட்டு இதுவரை 5,407 சொற்கள் சொற்குவை வலைதளத்தில் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. இந்தத் தளத்தில் 31.7.2021-இல் நிலவரப்படி 3 லட்சத்து 88,776 சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டிருந்தன.

இதைத் தொடர்ந்து கடந்த இரு ஆண்டுகளில் தமிழக அரசு மேற்கொண்ட நடவடிக்கைகள், ஊக்குவிப்பு ஆகியவற்றின் பயனாக 30.11.2022-இல் 7 லட்சத்து 81,533 சொற்களாகவும், நிகழாண்டு கடந்த ஏப்.13-ஆம் தேதி நிலவரப்படி 10 லட்சத்து 10,008 சொற்களாகவும் உயர்ந்துள்ளது.

**யுனெஸ்கோ மொழி வரிசையில்...** சொற்குவை வலைதளம் (எ்ர்ழ்ந்ன்ஸ்ஹ்ɪ. ஞ்ரீர்ம்) அகராதியியல் ஆய்வறிஞர்கள், சொல்லாக்க வல்லுநர்கள், தமிழ் அறிஞர்கள், பேராசிரியர்கள், ஆய்வு மாணவர்கள், ஆய்வாளர்கள் அனைவருக்கும் பயனளிக்கும் வகையில் செயல்பட்டு வருகிறது.

இதில் பதிவேற்றம் செய்யப்படும் சொற்களின் எண்ணிக்கை வருங்காலங்களில் மேலும் உயரும் போதும்.

இந்த சொற்குவைத் திட்டத்தை உலகெங்கும் உள்ள அறிஞர் பெருமக்களும், மொழியியல் ஆய்வாளர்களும் பயன்படுத்துவதன் மூலமும் ஐக்கிய நாடுகளின் அமைப்பு (யுனெஸ்கோ) வெளியிட்டுள்ள மொழிவரிசைப் பட்டியலில் முதல் வரிசையில் முன்னேற்றம் காண்பதற்கான வழிவகை அமையும் என்று கருதப்படுகிறது எனத் தெரிவித்துள்ளார் அவர்.

# அகரமுதலி இயக்ககம் நெறிப்படுத்தும் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம்!

"சென்றிடுவீர் எட்டுத் திக்கும் – கலைச்

செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்!"

– மகாகவி பாரதியார்

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவருவது தமிழ்மொழியின் சொல்வள மேம்பாட்டிற்குரிய முகாமையான பணியாகும்.

புறநிலையில் உள்ள சொல்லாக்க வல்லுநர்களிடமிருந்தும் பல்வேறு துறைசார்ந்த கலைச்சொற்களைப் பெற்று, ஆய்ந்து சொற்குவையில் சேர்த்து, தமிழின் கலைச்சொல் வளத்தை உயர்த்தும் நோக்கில், தமிழ்நாடு அரசின் சீரிய நெறிப்படுத்தலின்கீழ், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தால் 2021 அக்டோபர் 1ஆம் நாளிலிருந்து வெள்ளிதோறும் இணையவழிப் பன்னாட்டுக் கலைச்சொல்லாக்கப் பயிலரங்கம் நடத்தப்பெறுகிறது. இப்பயிலரங்கத்தின் 81–8 வரையிலான அமர்வுகள் 2023 ஏப்பிரல் 13, 21, 28, மே 05 ஆகிய நாள்களில் நடைபெற்றன. பல்பயிலரங்க அமர்வுகளில் அயல்நாட்டு அறிஞர்கள், உள்நாட்டு அறிஞர்கள் பங்கேற்று பல்வேறு துறைசார்ந்த தமிழ்க் கலைச்சொற்களை அறிமுகம் செய்து உரையாற்றினர்.

சொல்லாய்வாளர்கள், சொல்லாக்க அறிஞர்கள், தமிழார்வலர்கள், ஆய்வாளர்கள், பேராசிரியர்கள் உள்ளிட்ட பலர் பங்கேற்றும் பார்த்தும் பயன்பெற்றனர். கலைச்சொற்களை அறிமுகம் செய்த சொலாக்க அறிஞர்களுக்கும், பங்கேற்பாளர்களுக்கும் இயக்ககத்தின் சார்பில் பாராட்டுச் சான்றிதழ்களும் பங்கேற்புச் சான்றிதழ்களும் வழங்கப்பட்டன.

அமர்வுகளில் பங்கேற்கும் அறிஞர்களின் ஒருங்கிணைப்பினைப் பாரிசு பன்னாட்டு உயர்கல்வி தமிழாய்வு நிறுவன இயக்குநர் முனைவர் பேரா. ச. சச்சிதானந்தம் அவர்களும், தொழில்நுட்ப ஒருங்கிணைப்பினைச் சென்னை வேல்ஸ் அறிவியல் (ம) தொழில்நுட்ப உயர் ஆராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர்

இரா. பன்னிருகைவடிவேலன் மற்றும் இயக்கக உதவிப் பதிப்பாசிரியர் திரு. ஏ. காந்தி ஆகியோரும் மேற்கொண்டனர்.

## 14.03.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**திரு. பா. துவாரகன்**
வளர்ச்சிப்பணி அலுவலர் (பொ.)
மருத்துவ அருங்காட்சியகம் (ம)
தொலை மருத்துவப் பிரிவு,
யாழ்ப்பாண போதனா மருத்துவமனை, ,
இலங்கை



**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம்,
பாரிசு



**வண. நிக்கவெவெ சுமங்கல தேரர்**
இளங்கலைத் தமிழ் – பௌத்த (ம) பாலி
பல்கலைக்கழகம்,
சிங்கள – தமிழ் ஆசிரியர், இலங்கை



**கவிஞர் இர. தேன்மொழி**
தமிழார்வலர், பெங்களூர்

## 21.04.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**மரு. ச. விமலநாதன்**
முதுநிலை இதயமருத்துவ வல்லுநர்,
போதனா மருத்துவமனை, நார்வே



**மரு. சி. சிவதாஸ்**
உளமருத்துவ வல்லுநர்,
யாழ்ப்பாண போதனா மருத்துவமனை,
இலங்கை



**மரு. விக்டர் ஜோன் பிகுராடோ**
கனடா



**மரு. ப. நிர்மலா தேவி**
பேராசிரியர் (ம) துறைத்தலைவர்,
தோல், பால்வினை (ம)
தொழுநோய்த்துறை,
திருநெல்வேலி மருத்துவக் கல்லூரி (ம)
மருத்துவமனை



**முனைவர் அ.போ. இருங்கோவேள்**
பேராசிரியர், மருத்துவ சமூகவியல் (ம)
தமிழ் இலக்கியம்,
சங்கர நேத்ராலயா, சென்னை

## 28.04.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்



**மரு. முனைவர் சிவா தியாகராஜா**
ஒருங்கிணைப்பாளர்,
வரலாறு (ம) பாரம்பரியப் பிரிவு,
தமிழ்த் தரவல் நடுவம், இங்கிலாந்து



**திரு. த. சுதாகரன்**
வழக்கறிஞர், பிரான்சு



**பொறிஞர் சத்யன்**
மின்பொறியியல் மேற்பார்வையாளர்,
குவைத் தேசிய கன்னெய் துய்விப்பாலை,
குவைத்



**திரு. ம.மு. ரெங்கசாமி**
திரைப்பட ஒளிப்பதிவாளர்,
ஆவணப்பட இயக்குநர், சென்னை

## 05.05.2023ஆம் நாள் நடைபெற்ற பயிலரங்க நிகழ்வில் கலைச்சொற்களை அறிமுகம் செய்த அறிஞர்கள்

**பொறிஞர் பத்மப்ரியா இராகவன்**
இயக்குநர், டிவைன் இந்தியா நிறுவனம்,
பாரிசு



**பேரா. முனைவர் மா. மாதரி**
முன்னை புல முதன்மையர்,
வணிகவியல்துறை,
கோயம்புத்தூர்



**முனைவர் ஜெ. வினாயகம்**
பொருளாளர், தைவான் தமிழ்ச் சங்கம்,
தைவான்



**பொறிஞர் பா. வே. இரத்தினம்**
பயிற்றாசிரியர், பெங்களூர்



# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில

| திரு. பா. துவாரகன் | | |
|---|---|---|
| Casting | – | களைதல் |
| Characteristic roots | – | சிறப்பியல்பு மூலங்கள் |
| Anomaly | – | சீரிலி |

| பொறிஞர் பத்மப்ரியா இராகவன் | | |
|---|---|---|
| Hopepunk | – | நலப்போராளி |
| Grimdark | – | இருணர் / இருணப்போராளி |
| Tokenization | – | சொல் தரவாக்கல் / சொல்லாக்கல் |

| வண. நிக்கவெவெ சுமங்கல தேரர் | | |
|---|---|---|
| Spinach | – | பசளி |
| Solanum trilobatum | – | தூதுவளை |
| White sandalwood | – | வெண்சந்தனம் |

| கவிஞர் இர. தேன்மொழி | | |
|---|---|---|
| Third space endoscopy | – | மூன்றாம் அடுக்கிடை அகநோக்கி / மூன்றாம் விண்வெளி உள்நோக்கி |
| Breath test | – | மூச்சாய்வு / மூச்சுப் பகுப்பாய்வு |
| Respiratory medicine | – | மூச்சுமருத்துவம் |

| மரு. ச. லிமலநாதன் | | |
|---|---|---|
| Coronary angioplasty | – | இதயநாடி பழுதுபார்த்தல் |
| Sinusrythm | – | சந்த இதயத்துடிப்பு |
| Angina pectoris | – | மார்பழுத்தம் |

| மரு. சி. சிவதாஸ் | | |
|---|---|---|
| Inter personal skill | – | ஆளிடைத் திறன் |
| Trauma | – | உளப்பேரதிர்வு |
| Perinatal depression | – | பேறுகால மனச்சோர்வு |

| மரு. விக்டர் ஜோன் பிகுராடோ | | |
|---|---|---|
| Surgery | – | பகுப்பாய்வு மருத்துவம் |
| Coronavirus | – | மணிமுடி நுண்மி |
| Rash | – | தோற்பிறழ்வு |

| மரு. ப. நிர்மலா தேவி | | |
|---|---|---|
| Cutaneous bacterial infection | – | தோல்நுண்மித் தொற்று |
| Tick bite | – | உண்ணிக்கடி |
| Saprophytic | – | சாருண்ணி வகை |

# அறிஞர்கள் வழங்கிய கலைச்சொற்களுள் சில

| | | |
|---|---|---|
| **முனைவர் அ.போ. இருங்கோவேள்** | | |
| Macular Degeneration | – | விழிப்புள்ளி சிதைவு |
| Lattice Degeneration | – | பின்னல் சிதைவு |
| Intraocular Tumours | – | உள்விழி கட்டிகள் |
| **மரு. முனைவர் சிவா தியாகராஜா** | | |
| Right atrium | – | வலது இதய ஏற்பறை |
| Red blood corpuscle | – | செங்குருதிக் கலன் |
| Intercostal vein | – | விலாஎலும்பிடை நாளம் |
| **திரு. சுதாகரன்** | | |
| Civil wrong | – | குடியியல் தொல்லை |
| Drastic remedy | – | கடுந்தீர்வு |
| Inconvenience | – | உளப்போராட்டம் |
| **பொறிஞர் சத்யன்** | | |
| Machinist | – | பொறிக்கையாளர் |
| Lathe | – | கடைசற்பொறி |
| Tool post | – | அரைவுளி மேடை |
| **திரு. ம.மு. ரெங்கசாமி** | | |
| Capsule review | – | குறுத் திறனாய்வு |
| Chroma key | – | காட்சிப் பின்தள மாற்றி |

| | | |
|---|---|---|
| Cinematic syntax | – | காண்கலைத் தொடரியல் |
| **பொறிஞர் பத்மப்ரியா இராகவன்** | | |
| Skychology | – | முகிலுளவியல் |
| Dopamine decor | – | ஒளிரொப்பனை / பொலிவொப்பனை |
| Bag of words | – | சொற்பை |
| | | |
| **முனைவர் ஜெ. வினாயகம்** | | |
| Fluorine | – | அரியம் |
| Fluoamine | – | அரியமுநீரன் |
| Acetylfluoride | – | புளிப்பில் அரியம் |
| | | |
| **பேரா. முனைவர் மா. மாதரி** | | |
| Mutually exclusive | – | இருவேறு |
| Stragglers | – | திட்டமிடாதோர் |
| Thought provoking | – | அக எண்ணம் |
| | | |
| **பொறிஞர் பா. வே. இரத்தினம்** | | |
| Accelerator | – | துவலி |
| Sub marine | – | உள்மீரம் |
| Electronic circuit | – | எமினியச்சுற்று |

## அரசு அலுவலகங்களில் திருக்குறளும் கலைச்சொல்லும் தலைமைச் செயலர் அறிவுறுத்தல்

**சென்னை, மே 9:** அரசு அலுவலகங்கள், வாரிய அலுவலகங்களில் திருக்குறளை எழுதிவைக்க வேண்டுமென தமிழக தலைமைச் செயலர் வெ.இறையன்பு அறிவுறுத்தியுள்ளார்.



இதுகுறித்து அவர் அனைத்துத் துறைச் செயலர்கள், மாவட்ட ஆட்சியர்கள், துறைத் தலைவர்களுக்கு அண்மையில் அனுப்பிய கடிதம்:

தலைமைச் செயலக துறைகள், துறைத் தலைமை அலுவலகங்கள், தன்னாட்சி நிறுவனங்கள், வாரியங்கள், கழகங்கள், இணையங்கள் ஆகியவற்றின் தலைமை அலுவலகங்களில் நாள்தோறும் ஒரு திருக்குறளை, அதன் பொருளுடன் கரும்பலகையில் எழுதி வைக்க வேண்டும்.

மேலும், ஆட்சி சொல்லகராதியில் உள்ள சொற்களில் நாள்தோறும் ஒரு ஆங்கிலச் சொல்லையும் எழுத வேண்டும். இதற்கான உத்தரவு ஏற்கெனவே 2000-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. இந்த உத்தரவு பெரும்பாலான இடங்களில் பின்பற்றப்படவில்லை.

எனவே, திருக்குறளின் முப்பாக்களில் அறத்துப்பால், பொருட்பால் ஆகிய அதிகாரங்களில் ஏதேனும் ஒன்றை அதன் பொருளுடனும் நாள்தோறும் எழுதி வைக்க வேண்டும்.

தமிழ் ஆட்சிச் சொல் அகராதியில் உள்ள சொற்களில் ஒரு ஆங்கில சொல்லையும் கரும்பலகை அல்லது வெள்ளை பலகையில் நாள்தோறும் எழுதி வைக்க வேண்டும்.

இதனை அனைத்துத் துறை செயலர்கள், துறைத் தலைவர்கள் உள்ளிட்டோர் பின்பற்ற வேண்டும் என்று அந்த கடிதத்தில் தலைமைச் செயலர் வெ.இறையன்பு தெரிவித்துள்ளார்.

நன்றி : தினமணி

# தமிழில் கலைச்சொல் தேடல்




பொறிஞர் பா.வே. இரத்தினம்
பயிற்றாசிரியர்,
பெங்களூர்


தமிழில் கலைச்சொல்லாக்கப் பணி வெற்றிபெற பல வழிகளைத் தேட கடமைப்பட்டுள்ளோம்.

அறிவியல் தமிழ் எனும் நூலில் முனைவர் குழந்தைசாமி அவர்கள் "புதிய புனைவுகளின் (Innovations) அடிப்படையில் உருவாகும் பொருள்கள், செயல்முறைகளைப் பயன்படுத்தும் தகுதியைத் தமிழ்மக்கள் பெறவேண்டும். இதைச் சாதிக்க தமிழ்மொழிவழிக் கல்வி அவசியம்" என்கிறார். இக்கருத்தை முதலில் எல்லோருக்கும் புரியும் வண்ணம் பரப்பல் வேண்டும். இனி கலைச்சொற்கள் தேர்வதில் உள்ள சவால்கள் மற்றும் மக்கள் அளவில் பங்கேற்க உரிய செயல்பாடுகளைச் சற்றுக் காண்போம்.

## பொறியியல் கல்லூரிகளில்

- முதல் இரண்டு அரையாண்டுகளில் (Semester) தமிழ்ப் பாடங்கள் இடம்பெற வேண்டும். அவற்றில் இலக்கியம்,, இலக்கணப் பாடங்களைத் தவிர்த்து, ஆங்கிலத்தில் கலைச்சொற்கள் எவ்விதம் சேர்க்கப்படுகின்றன, அதற்கான அமைப்பு என்ன, என்பனவற்றுடன் என்னென்ன வழிகாட்டல்கள் (Guidelines) கொள்கைகள் (Policy), சொல்லாக்க மரபுகள், முறைகள் போன்றவற்றையும் இணைக்க வேண்டும். அத்துடன் தமிழில் கலைச்சொல்லாக்கத்திற்குத் தேவையான வழிகாட்டுதல்களையும் இணைக்க வேண்டும்.
- கலைச்சொற்கள் பற்றிய கட்டுரைப் போட்டிகள், கருத்தரங்குகள் நடத்தலாம்.
- ஆய்வுக்கான ஆய்வு நூல்கள் வெளியிட உதவித்தொகை வழங்கலாம்.
- ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்க்க சரியான நுட்பங்களைப் பாடமாக்கலாம்.
- ஆய்வுகள் மேற்கொள்ள உதவித்தொகையுடன் சான்றிதழும் வழங்கினால் மாணவர்கள் இத்துறையில் சேர்ந்து பணிபுரியும் வாய்ப்புப் பெருகும்.
- தமிழில் சொல்லாக்க நூல்களை வெளியிட்டு அவற்றைப் பாடமாக்கலாம்.

## பலமொழி கற்க ஊக்கப்படுத்தலாம்

- பல மொழிகளில் சொல்லாடல் பற்றி ஒப்புநோக்கிப் பயிலும் முறைகளை அறிமுகப்படுத்தலாம். (கட்டுரையாளர் ஜெர்மன் மொழி கற்றதால் அதில் கையாளப்படும் Umlout எனும் ஒலிக்குறியீட்டு முறையைப் பின்பற்றி, தமிழில் Ba, Ga, Za எனும் ஒலிகளை எழுத ப, க, ஸ, என்று கண்டுள்ளார். Eg: Uber – U அழுத்தி ஒலிக்கப்படும்) வேறு மொழிகளில் தமிழுக்கு ஒத்துவரும் ஒலி – வரிவடிவம் கிடைக்க வாய்ப்புள்ளது. (சுனாமி என்பது ஜப்பானில் Tsunami என ஒலிக்கும்)
- ஒலி இலக்கணம் (Phonetics) தமிழில் செய்தால் "ட்சுனாமி" என எழுதுவதை அறிவியல்/ தொழில்நுட்ப நூல்களில் அனுமதிக்கலாம்.
- பலமொழி ஒலிகளை வரிவடிவத்தில் கொண்டுவந்தால், ஒலிப்பெயர்ச்சி செய்வது இலகுவாகும். எடுத்துக்காட்டாகக் கீழ்க்காணும் ஒலிபெயர்ப்பைப் பார்க்கலாம்.

Cha = ச

Sa = ஸ

Za = ஸ  Zambia = ஸாம்பியா,
Zirconium = ஸிர்கொனியம்

Xe = ச  Xerox = செராக்ஸ்
Xenon = செனான்

Da = ட  Myo cardial = மயோ கார்டியல்

Ba = ப  Barium = பேரியம்

ஒலிகளை எழுத, ஒலி இலக்கணம் அவசியம். எந்தப் பொருளைக் குறிக்க, எந்த விகுதியைத் தேரவேண்டும் என்றால், வரைமுறையுற்ற (defined) வழிகாட்டல் (Guide line) தேவை.

Eg : 1. நுண்மி, நுண்மம், நுண்ணி, நுண்ணம், நுண்வி, நுட்பி

Intestinal Probiotic Bacteria = குடலுய் (குடல்+உய்) ஈருயிர நுண்மி

Anti Biotic Bacteria = ஈருயிரநுண்ணி (உண்ணி என்பது Anti Biotic) எனவே நுண்ணி என்பது சரியாகும்.

Eg : 2. Logy என்றால் Study எனப் பொருள்

Technology – Study of Techniques

ics எனும் ஒட்டுக்கு (விகுதி) இய என்று எழுதலாம்.

Electronics – ics indicates utilisation of Electrons

## சொற்சுருக்கம் பேணல்

தமிழில் எழுதுவதும் (இலக்கணத்தால்) பேசுவதும் வேறுபட்டமையால், பல நூற்றாண்டுகளில் தமிழ் பல திராவிட மொழிகள் கிளைத்ததனால், தமிழ் பேசுவோர் எண்ணிக்கை மிகக் குறைந்துவிட்டது. இதேபோல் ஒரு ஆங்கிலக் கலைச்சொல்லுக்குரிய பல தமிழ்ச் சொற்களோ அல்லது நீண்டு ஒலிக்கும் பன்சொற்களோ பயன்படுத்தினால், மொழி சிதைய வாய்ப்பளித்துவிடும். எனவே சுருங்கக்கூறி விளக்குதல் வேகமான இவ்வுலகில் மிகப் பயனளிக்கும்.

தளிர்விடுதல் என்பதைத் தளிர்த்தல் எனச் சுருக்குதல் தேவை.

Banking Ombudsman என்பதை வைப்பகக் குறைதீர்ப்பவர் எனலாம்.

Electron – எதிர் மின் – எமின் (சுருக்கம்)

Proton – நேர்மின் – நேமின் (சுருக்கம்)

மின் அணு : It does not indicate –ve charge. It refers to charged atom (ions) which in misnomer

அறிவியல் சொற்கள் – இடுபெயர்கள். ஒரு மாத்திரை, இரு அல்லது மூன்று மாத்திரை கால அளவில் ஒலித்தல் மிகவும் இன்றைய தேவை

தொடரும்...

தினகரன் தமிழகம்

செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் கீழ்

# 10.10 லட்சம் கலைச்சொற்கள் பதிவேற்றம்

■சிறப்பு செய்தி

**தமிழ்நாடு அரசின் செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் கீழ் இதுவரை சுமார் 10.10 லட்சம் கலைச்சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன.**

மொழி என்பது மக்களின் முதல் அடையாளம். சொற்களே மொழிக்கு அடிப்படை. சொல் வளமே மொழி வளமாகும். சொற்களின் எண்ணிக்கை பெருக்கமே மொழியை வாழ வழிவகுக்கும். இத்தகைய சிறப்புமிக்க செம்மொழியான தமிழ் மொழியிலுள்ள அனைத்துச் சொற்களையும் பாதுகாத்து, வேர்ச் சொற்களுடன் கூடிய 'சொற்பிறப்பியல் அகராதி' உருவாக்கிட 1974ல் மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரை முதல் இயக்குநராக கொண்டு செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தை அப்போதைய முதல்வர் கலைஞர் துவக்கினார். தற்போது தமிழ்நாடு முதல்வர் மு.க.ஸ்டாலின் உத்தரவுக்கிணங்க, அகரமுதலி திட்ட இயக்ககமானது அகராதிப் பணிகளோடு, காலத்திற்கேற்ற புதிய கலைச் சொற்களை உருவாக்கி வழங்குவது மற்றும் தமிழ் மொழியின் மேம்பாட்டுக்கான ஆக்கப் பணிகளையும் செயல்படுத்தி வருகிறது.

செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் மூலம் கடந்த 2 ஆண்டுகளில் நடைமுறை தமிழ் அகரமுதலி, மாணவர் இலக்கிய தமிழ் அகரமுதலி, அயற்சொல் அகராதி, மயங்கொலிச் சொல்லகராதி, ஒரு பொருட் பன்மொழி அகராதி, போன்ற நூல்கள்

### தமிழ்நாடு அரசின் தமிழ் மொழி வளர்ச்சிக்கு பாராட்டு




### மொழி வரிசை பட்டியலில் தமிழ் மொழி முன்னேறும்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக இயக்குநர் கோ.விசயராகவன் கூறும்போது, "சொற்குவையின் கலைச்சொல் எண்ணிக்கை இதுவரை 10,10,008 ஆக உள்ள நிலையில், இனி வரும் காலங்களில் மேலும் இது உயரும். இச்சொற்குவைத் திட்டத்தை உலகெங்கும் உள்ள தமிழ் அறிஞர்களும், மொழியியல் ஆய்வாளர்களும் பயன்படுத்துவதன் மூலமும் ஐக்கிய நாடுகளின் அமைப்பு (யுனெஸ்கோ) வெளியிட்டுள்ள மொழிவரிசைப் பட்டியலில் முதல் வரிசையில் தமிழ்மொழி முன்னேற்றம் காண்பதற்கான வழிவகை அமையும்.

பொன்விழா காணவுள்ள செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் தமிழ்ப்பணிகள் தமிழ்நாடு அரசின் வழிகாட்டுதலில் சிறப்புடன் செயல்பட்டு வருகிறது" என்றார்.

### வட்டார வழக்கு அகராதி சொல் விரைவில் வெளியீடு

வட்டார வழக்கு சொற்கள் தான் தமிழ்மொழியின் துவக்க நிலையை கண்டறிவதற்கும், மூலச் சொற்களை உணர்ந்து புதுச் சொல்லாக்கம் உருவாக்குவதற்கும் உதவியாக அமைகிறது. அத்தகைய வட்டார வழக்கு சொற்களை பாதுகாக்கும் வகையில் 'வட்டார வழக்கு சொற்பொருள் அகராதி' உருவாக்கப்பட்டு வருகிறது. இதற்காக சென்னை, சேலம், திருச்சி, நெல்லை, மதுரை, கோவை ஆகிய 6 மண்டலங்களாகப் பிரித்து ஒவ்வொரு மண்டலத்திற்கும் தனித்தனி ஒருங்கிணைப்பாளர்கள் குழு அமைத்து, 2023 மார்ச் 19ம் தேதி வரை 18,784 சொற்கள் திரட்டப் பெற்றுள்ளது. இவ்வகராதி விரைவில் வெளியிடப்படவுள்ளது.

வெளியிடப்பட்டுள்ளன. மேலும் ஆட்சிச் சொல்லகராதி திருந்திய பதிப்பு, துறை வாரியான ஆட்சிச் சொல்லகராதி குறுநூல், தமிழ் மரபுத் தொடர் அகராதி ஆகியவை நூல் ஆக்க பணியில் உள்ளன.

தமிழ்நாடு பாடநூல் மற்றும் கல்வியியல் பணிகள் கழகத்துடன் இணைந்து துறைசார் வல்லுநர்களை கொண்ட குழுக்கள் அமைத்து, ஆண்டுக்கொரு துறையை தேர்வு செய்து கலைச்சொல் அகராதிகளை உருவாக்கி வெளியிடவுள்ளது. இதன்படி நடப்பாண்டில் முதற்கட்டமாக மருத்துவக் கலைச்சொல் அகராதி உருவாக்கப்பணி நடக்கிறது. இதற்காக 2023 மார்ச் வரை 27,018 சொற்கள் தொகுக்கப்பட்டுள்ளன. வரும் நவம்பரில் வெளியிடப்படவுள்ள மருத்துவக் கலைச்சொல் அகராதி, வரும் காலத்தில் மருத்துவ மாணவர்கள் தாய்த்தமிழில் மருத்துவம் பயில துணை நிற்கும்.

தெலுங்கு, கன்னடம், மலையாளம் உள்ளிட்ட திராவிட மொழிகளிலும் மற்றும் ஆங்கிலம், இந்தி உள்ளிட்ட பிறமொழிகளிலும் தமிழ்மொழியை இலகுவாகக் கற்கும் வகையில் அந்தந்த மொழிகளில் புலமை வாய்ந்த வல்லுநர்கள் மூலம் பாடத்திட்டங்கள் உருவாக்கப்பட்டு பாடநூல், பன்மொழி அகராதி உருவாக்கும் பணி மும்முரமாக நடக்கிறது. மேலும், பன்மொழி அகராதியை உள்ளடக்கி தமிழ் கற்கும் வகையில் திறன்மிகு குறுஞ்செயலி உருவாக்கப்பட்டு இந்தாண்டிற்குள் மக்கள் பயன்பாட்டுக்கு கொண்டு வரப்படவுள்ளது.

தமிழறிஞர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள், தமிழார்வலர்கள் மற்றும் வெளிநாடுவாழ் தமிழர்கள் உள்ளிட்ட அனைவரும் இணையதளம் மூலம் ஆங்கிலத்திற்கு இணையான தமிழ் கலைச்சொற்களைத் தாமே உள்ளீடு செய்யும் வகையில், 'கலைச்சொல் தொகுப்பி' உருவாக்கும் பணிகளும் தீவிரமாக நடக்கிறது. அரசு துறைகளின் புதிய கலைச் சொற்களைத் தொகுத்து ஆட்சிச்சொல் குறுநூலாகத் தமிழ் வளர்ச்சித்துறை மானியக் கோரிக்கையின் போது ஆண்டுதோறும் வெளியிடப்படவுள்ளது.

மேலும், தமிழ் அகராதியியலின் தந்தை எனப்போற்றப்படும் வீரமாமுனிவரை போற்றும்விதமாக அவரது பிறந்தநாளான நவ. 8ம் தேதி, தமிழ் அகராதியியல் நாளாக கொண்டாடப்படுகிறது. இதையொட்டி ஆண்டுதோறும் தமிழ் தொண்டாற்றிய 43 பேரை தேர்வு செய்து, விருதுகள், பரிசுகள் வழங்கப்படுகிறது. 'சொல் வயல்' மாத மின்னிதழ் கடந்த ஏப்ரல் வரை 35 இதழ்கள் வெளியிடப்பட்டுள்ளன.

சொற்குவை வலைத்தளம்: தமிழ்மொழியின் அனைத்துச் சொற்களையும் தொகுத்து, அச்சொற்களுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களோடு பொருள் விளக்கம் அளித்து, அச்சொற்களுக்கான வேர்ச்சொல் விளக்கத்தையும் சொற்குவை (sorkuvai.com) என்ற வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகிறது.

இன்றைய அறிவுப்புலத்தில் உள்ள நூற்றுக்கும் மேற்பட்ட துறைகளில் புழங்கும் கலைச்சொற்களை திரட்டி அவற்றிற்கு நிகரான தமிழ்க் கலைச்சொற்களை வடிவமைத்து இணையதளம் மூலமாக பொதுவெளியில் வெளியிடுவதும், இதுவரை தமிழில் வெளிவந்துள்ள அகராதிகளில் இடம்பெற்றுள்ள அனைத்துச் சொற்களையும் ஒன்று திரட்டி, அவற்றுள், வந்தசொல்லே திரும்பவும் வராத வகையில் தமிழின் சொல்வளத்தை உலகறியச் செய்வது இந்த அகரமுதலி இயக்ககத்தின் சொற்குவைத் திட்டத்தின் முதன்மை நோக்கமாகும்.

தமிழ் கலைக்கழகத்தில் 132 கூட்டங்கள் நடத்தியும், மருத்துவம், ஊடகத்துறை, கணினி, தொல்லியல், கல்வெட்டியியல், அருங்காட்சியகம், நெசவுத் துறை, பட்டு வளர்ச்சித் துறை, கால்நடைத்துறை, வேளாண் துறை போன்ற துறை சார்ந்த வல்லுநர்களிடமும், மாணவர்களிடமும் கலந்தாய்விலும், இணையவழி பயிலரங்கில் சேகரித்தும் சொற்குவை வலைத்தளத்தில் பல ஆயிரக்கணக்கான சொற்கள் தொடர்ந்து பதிவேற்றம் செய்யப்பட்டு வருகிறது.

சொற்குவை துவங்கப்பட்டு 2021 ஜூலை 31 வரை சொற்குவை வலைதளத்தில் 3,88,776 சொற்களே பதிவேற்றம் செய்யப்பட்டிருந்தது. ஆனால் கடந்த 2 ஆண்டுகளில் தமிழ்நாடு அரசின் நடவடிக்கையால் 2023, ஏப். 13 வரை 10,10,008 கலைச்சொற்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. அரசின் தமிழ் மொழி வளர்ச்சிக்கு தமிழ் ஆர்வலர்கள் பாராட்டு தெரிவித்துள்ளனர்.